# பகைவன் ஒழிக!

































*பல் எனாமலை அழித்து, வலிதரும் சொத்தையை உண்டாக்கும் கார்போக்ஸில் அமில வகையின் சூத்திரம்.

பல்லுக்கு உறுதி, பற்சிதைவுக்கு எதிரி —பினாகா ஃப்ளோரைட்.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

மனதில் அன்பு இருக்க வேண்டும். அது இல்லாத வாழ்க்கை பாலைவனத்திலுள்ள பசுமரத்திற்குச் சமம். இதனையே வள்ளுவர்

> அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
> வற்றல் மரந்தளிர்த்தற்று

எனக் கூறினார். பாலைவனதில் மரம் துளிர் விட்டால் என்ன பயன்? எனவே வாழ்க்கையில் அன்பு இருந்தாலே பயனுள்ளது என்பதை வள்ளுவர் எடுத்துக் காட்டியுள்ளதை நன்கு உணர்ந்து கொள்வோமாக.

> ப்ரளயச் சின்னமர்யாதா பவந்தி கில சாகரஹ
> மர்யாதா பேதமிச்சந்தி ப்ரளயேபி ந சாதகஹ

பிரளயம் வரும்போது கடல்கூட தன் கட்டுப்பாட்டை மீறி கரையை உடைத்துக் கொண்டு பூமிக்குள் புகுந்து விடும். ஆனால் நல்லவர்களோ அவர்களுக்கு எப்படிப் பட்ட ஆபத்து வந்தாலும் தம் கட்டுப்பாட்டை மீறி நடக்க மாட்டார்கள் என்பது இந்த வடமொழிச் செய்யுளின் கருத்து.

மதிமுகம்: 65 நவம்பர் 1979 புன்னகை: 5

தனிப் பிரதி: ரூ. 1-25 வருட சந்தா: ரூ. 15-00






**எல். ராதிகா, பீமவரம் (ஆந்திரா)**

கேள்வி: பூமியிலிருந்து உயரப்போனால் பிராணவாயுவே இல்லை என்று கூறப்படுகிறதே. பிராணவாயு இல்லாமல் சூரியன் மட்டும் எப்படி ஒளியைத் தருகிறது?

பதில்: பூமியைச் சுற்றியுள்ள காற்று மண்டலம் ஒரு சில மைல் தூரத்திற்கே உள்ளது. அதற்கு அப்பாலுள்ள இடத்தில் பிராணவாயு உள்ள காற்று மண்டலம் இல்லை. எனவே இந்தக் காற்று மண்டலத்திற்கு அப்பாலுள்ள பொருள்கள் எரிய இக்காற்று மண்டலப் பிராணவாயு தான் தேவை என்பதில்லை. மற்றொரு விஷயம். எரிவது வேறு ஒளி விடுவது வேறு. பூமியிலிருந்து பல ஆயிரம் மைல் தூரத்திலுள்ள சூரியன் பூமியின் பிராணவாயுவால் எரியவில்லை. அது ஒளிவிடும் பெரிய கோளம். மின்விளக்குகள் எரிவது இல்லை. அவை மின் சக்தியால் ஒளியைப் பெற்று நமக்கு வெளிச்சம் கொடுத்துக் கொண்டே இருப்பது போலத் தான் இதுவும்.

**கே. சேஷாத்திரி ராவ், துக்கிராலா (ஆந்திரம்)**

கேள்வி: நாம் ஆகாயத்தில் விமானத்தில் பறந்து பூமியின் ஈர்ப்பு சக்தி உள்ள இடத்திற்கும் அப்பால் போய் பனிரெண்டு மணி நேரம் சுற்றி விட்டு இறங்கினால் பூமியில் இறங்குவோமா அல்லது வேறு எங்காகிலுமா?

பதில்: பூமியின் ஈர்ப்பு சக்தி உள்ள இடத்திற்கு அப்பால் கடந்து போக ஆகாய விமானம் பயன்படாது. ஆகாய விமானங்களில் ஒரு குறிப்பிட்ட உயரத்திற்கு மேல் பறந்து செல்ல முடியாது. எனவே பூமியின் ஈர்ப்பு சக்தி உள்ள இடத்திற்கும் அப்பால் போக வேண்டுமானால் அதற்கென உயரப் போவதற்கும் திரும்பி வருவதற்கும் ராக்கட்கள் தேவை. எனவே விமானத்தில் போய் நீங்கள் கூறுகிறபடி பனிரெண்டு மணி நேரம் சுற்ற முடியாது.




அந்தப் படித்த முட்டாள்கள் ஒட்டகத்தையும் கழுதையையும் சேர்த்துக் கட்டி ஓட்ட முயன்றார்கள். ஆனால் முடியாது போகவே கழுதையையும் ஒட்டகத்தையும் அடிக்கலானார்கள். அவை பலமாகக் கத்தவே கழுதையின் எஜமானனான வண்ணானும் ஒட்டகத்தின் எஜமானனான வியாபாரியும் ஓடோடி வந்தார்கள். அவர்கள் அந்த நால்வரையும் தம் தடிகளால் அடித்து விரட்டி விட்டுத் தம் பிராணிகளை ஓட்டிக் கொண்டு சென்றார்கள்.

ஓடிப்போன நால்வரில் ஒருவன் ''நம்மை இருவர் அடித்தார்கள். அவர்களது நோக்கம் என்ன?'' என்று கேட்டான். அதற்கு இன்னொருவன் ''அவர்கள் முட்டாள்கள். பண்டிதர்களாகிய நம் செய்கைகளை அவர்களால் கொஞ்சம் கூடப் புரிந்து கொள்ள முடியாது'' என்றான்.

அவர்கள் கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு ஆழமான ஆறு குறுக்கிட்டது. அதன் மத்தியில் ஒரு இலை அடித்துக் கொண்டு வரப்படுவதை அவர்கள் பார்த்தார்கள். அது கண்டு ஒருவன் ''இலை நதியைக் கடந்து அக்கரை சேர்ப்பிக்கும்'' எனக் கூறி நதியில் குதித்தான். ஆழமான சுழலில் அகப்பட்டு அவன் மேல் போக முடியாமல் தத்தளித்தான்.

அப்போது மற்றவன் "எல்லாம் போகும் நிலையில் இருக்கும் போது அதில் ஒரு பாகத்தையாவது காப்பாற்ற முயல வேண்டும்'' எனத் தன் புத்தகத்தில் உள்ளதைப் படித்தான். பிறகு கத்தியோடு நதியில் குதித்து அங்கு தத்தளிக்கும் தன் நண்பனின்



தலையை வெட்டி எடுத்து வந்தான். ஆனால் அந்தத் தலை தம்மோடு பேச முடியாது என்பதை அப்போது தான் அம் மூவரும் கண்டனர். அதனால் அந்தத் தலையை தூர விட்டெறிந்து விட்டு அவர்கள் மூவரும் அங்கிருந்து கிளம்பிச் சென்று ஒரு கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அக் கிராமத்தவர் யாரோ மூன்று பண்டிதர்கள் வந்திருக்கிறார்கள் என எண்ணி மூவரையும் தனித்தனியாகத் தம் வீடுகளுக்குச் சாப்பிட அழைத்துச் சென்றார்கள். முதலாவது பண்டிதரை அழைத்துப் போனவன் பால் பேணியை ஒரு தட்டில் வைத்துக் கொடுத்தான். அதைக் கண்ட பண்டிதர் ''நீண்டு கொண்டிருந்தால் நாசமே'' எனக் கூறி அதைச் சாப்பிடாமல் எழுந்து சென்றான்.

இரண்டாவது பண்டிதரை அழைத்துப் போனவன் பெரிய பெரிய அடைகளாக இரண்டைச் சாப்பிடக் கொடுத்தான். அந்தப் பண்டிதரோ ''அகண்டுள்ளது அதிகநாள் இராது'' எனக் கூறி சாப்பிடாமலேயே எழுந்து போய் விட்டார்.

மூன்றாவது பண்டிதரை அழைத்துச் சென்றவன் அதிரசங்களைக் கொண்டு வந்து கொடுத்தான். அவை சிறுசிறு பாளங்களாகவும் ஓட்டுச் சில்கள் போலவும் இருப்பது கண்டு ''சில்கள் பல இருந்தால் சிறந்து விளங்காது'' எனக் கூறி சாப்பிடாமல் எழுந்து போனான்.

இதை அவ்வூரார் கண்டு ''இவர்கள் படித்து என்ன பயன்? அனுபவ அறிவு இல்லையே'' எனக் கூறிக் கேலியாய்ச் சிரித்தார்கள்.

மகா லோபி இக் கதையைக் கூறி ''மனிதர்கள் உயரவும் தாழவும் அவர்கள் படித்த படிப்பு காரணமல்ல அனுபவ அறிவு மட்டுமல்ல. கடவுளின் கிருபையும் இருக்க வேண்டும். அது இருந்தால் ஒரு சாதாரண மனிதன் உயர்நிலையை அடையலாம்.

எவ்வளவுதான் பலமோ, பணமோ. அறிவோ இருந்தாலும் கடவுளின் அருள் இல்லாவிட்டால் அவனால் வாழ முடியாது. இதற்கு உதாரணமாக சகஸ்ர புத்தி, சத புத்தி, ஏகபுத்தி என்பவர்களின் கதையைக் கூறுகிறேன். கேள்'' எனக் கூறிக் கதையைச் சொல்லலானான்.

ஒரு குளத்தில் சகஸ்ர புத்தி, சதபுத்தி என்ற இரண்டு பெரிய மீன்களும் ஏகபுத்தி என்ற ஒரு தவளையும் வசித்து வந்தன. மூன்றும் நெருங்கிய நண்பர்களே. ஒருநாள் அவை பேசிக் கொண்டிருக்கும் போது மீனவர்கள் அங்கு வந்தார்கள். அவர்கள் அந்தக் குளத்தைப் பார்த்துவிட்டு ''ஓ! இந்தக் குளத்தில் நிறைய மீன்கள் இருக்கும் போலிருக்கிறது. நாளை வந்து வலை போட்டுப் பிடிக்கலாம்'' எனப் பேசிக் கொண்டு போனார்கள். இதை அந்த மூன்று நண்பர்களும் கேட்டன.

அப்போது ஏகபுத்தி ''இனி நாம் இங்கே இருப்பது சரியல்ல. நாளை இந்த மீனவர்கள் வந்தால் நம்மைப் பிடித்துக் கொண்டு போய்விடுவார்கள். எனவே இங்கே இருந்து வேறு குளத்திற்கு நாம் போய் விடலாம்'' என்றது.

ஆனால் சகஸ்ர புத்தியோ ''நீ அவர்கள் பேசுவதைக் கேட்டு



பயந்து விட்டாயே! முதலில் அவர்கள் நாளைக்கு இங்கே வராமல் போகலாம். அப்படி வந்தாலும் வலையை வீசாமல் போகலாம். அப்படியே வலையை வீசினாலும் நாம் அதில் அகப்படாமல் போகலாம். எனவே பயம் வேண்டாம்'' என்றது.

சதபுத்தியும் ''உலகில் முடியாதது என்பது எதுவும் இல்லை. சகஸ்ரபுத்தி கூறுவது சரியே. நாம் எப்படியும் தப்பிவிடுவோம். மதி இருந்தால் விதியைக் கூட வெல்லலாம். நாம் இருக்கும் இடமே சொர்க்கம். இதை விட்டுவிட்டு ஏன் போக வேண்டும்?'' என்று கூறியது.

ஏகபுத்தியோ ''நண்பர்களே, நான் உங்களைப் போல அதிபுத்தி சாலியல்ல. எனக்குத் தெரிந்ததைக் கூறினேன். என் அறிவு என்னை உடனே இந்தக் குளத்தை விட்டுப் போய்விடும்படி எனக்குக் கூறுகிறது. உங்களது புத்தியோ பலவேறு வாதங்களைக் கூறி இங்கேயே இருக்கச் சொல்கிறது. நீங்கள் வேண்டுமானுல் இங்கேயே இருங்கள். நான் வேறு எங்காவது போய்விடுகிறேன்" என்று கூறி அங்கிருந்து கிளம்பிச் சென்றது.

மறுநாள் மீனவர்கள் தம் வலைகளை வீச வந்தார்கள். குளத்தில் வலை போட்டு அதில் மீன்களையும் தவளைகளையும் நண்டுகளையும் நிறையப் பிடித்தார்கள். அவ்வாறு பிடிபட்ட மீன்களில் சகஸ்ர புத்தியும், சத புத்தியும் இருந்தன. அவை தம் குடும்பத்தவரோடு தப்ப முயன்றும் முடியாதுபோய் எல்லோருமாக வலையில் அகப்பட்டுக் கொண்டன. மீனவர்கள் மிகத் திருப்தி அடைந்தவர்களாய் மத்தியானம் ஆனதும் அங்கிருந்து மீன்களை எடுத்துச் சென்றனர். சகஸ்ர புத்தியும் சதபுத்தியும் மிகப் பெரியனவாயும் பளுவாயும் இருந்ததால் ஒருவன் சதபுத்தியைத் தன் தோளின்மீது போட்டுப் பிடித்துக் கொண்டு நடந்தான். சகஸ்ர புத்தியை ஒரு கயிறில் கட்டி இரு மீனவர்கள் தூக்கிக் கொண்டு சென்ருர்கள்.

ஏகபுத்தி சற்று தூரத்திலுள்ள ஒரு குளத்திற்குப் போயிருந்தது. அதன் வழியே மீனவர்கள் தன் இரு நண்பர்களையும் தூக்கிக் கொண்டு செல்வது கண்டு தன் மனைவியிடம் ''பார்த்தாயா! அதிபுத்திசாலிகள் என நினைத்த இவர்கள் மீனவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டார்கள். நானோ முன்னதாகவே அந்தக் குளத்திலிருந்து தப்பி வந்து விட்டேன்'' என்றது.






# 16

[கரடிராயன் உதயபுர மன்னனை மன்னித்து மாயக்குரங்கைத் தேடலானான். மாயக்குரங்கு சூழ்ச்சிக்கார மந்திரியிடம் இருப்பது அறிந்து கரடிராயன் மாமணியுடன் அவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றான். இதற்குள் உலக்கைராயன் தன் கதையால் மாயக்குரங்கை அடிக்க அது உயர எழும்பிக் குதித்தது. பிறகு—]

அடி தன் மீது விழாமல் மாயக் குரங்கு தப்பியது. இதனால் ஆத்திரப்பட்ட உலக்கைராயன் மறுபடியும் தன் கல்கதையை எடுத்து அதனை உயர்த்தினான். அது மாயக்குரங்கு அமர்ந்திருந்த குதிரையின் தலையைத் தாக்கவே அது பலமாகக் கனைத்து, மிரண்டு மற்றொரு குதிரை மீது போய் விழுந்தது. அந்தக் குதிரை மீதிருந்த வீரன் கீழே உருண்டு விழுந்தான். மாயக்குரங்கோ தான் ஏறியிருந்த குதிரையைத் தலைநகரின் பக்கமாகப் போகத் திருப்பியது.

உலக்கைராயன் அவனைத் தாக்க ஓடிய போது மாயக்குரங்கு சூழ்ச்சிக்கார மந்திரியைப் பார்த்து ''ஐயா, மந்திரியாரே. உங்களால் எதுவும் செய்ய முடியவில்லையே.



நான் போய் சந்திரபுர மன்னனிடம் இங்கு நடந்ததை எல்லாம் சொல்லி நகரப் பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொல்கிறேன்'' என்றான்.

மந்திரி கோட்டைக்குள் இருந்து தன்னை நோக்கி ஓடிவரும் கரடிராயனையும் மாமணியையும் பார்த்து விட்டு நடுநடுங்கினான். அவன் மாயக் குரங்கைப் பார்த்து ''புளுகுராயா! நில். இதோ பார். ஒரு பக்கம் உலக்கைராயன் மறு பக்கம் கரடிராயனும் மாமணியும் தாக்க இருக்கிறார்கள். இவர்களை யாரால் எதிர்த்துத் தோற்கடிக்க முடியும்? ஊ ஹூம். யாரால் இப்போது தலைநகரைக் காக்க முடியும். வா! நாம் காட்டிற்குள் ஓடி விடலாம்'' என்று கூவினான்.

மாயக் குரங்கோ "அமைச்சரே! கோழைகளே நீங்கள் சொல்வது போல நடப்பார்கள். நான் போய் மன்னரைக் கண்டு இந்தக் கரடிராயனையும் மாமணியையும் ஒழிக்க வழி செய்கிறேன்'' எனக் கூறி விட்டுத் தன் குதிரையைச் செலுத்தலானான்.

உலக்கைராயனோ ''ஏய் அமைச்சனே! எனக்கு உன் வீரர்கள் மீதோ அல்லது இந்தச் சிற்றரசன் வெள்ளி அம்பலத்தின் மீதோ எந்த விதமான கோபமும் இல்லை. மாமணிக்குத் தூக்கு தண்டனை விதித்து நீயே இந்தத் தலைவலியை வரவழைத்துக் கொண்டாய். உன்னைத் தான் தக்க விதத்தில் இப்போது தண்டிக்க வேண்டும். முதலில் குதிரை மீதிருந்து கீழே இறங்கு'' என்றான். ஆனால் மந்திரியோ தன் குதிரையைத் தலைநகரின் பக்கமாகத் திருப்பி வேகமாக ஓட்டலானான்.

வெள்ளி அம்பலமும் மற்ற வீரர்களும் மந்திரியின் பின்னால் ஓடினார்கள். அப்போது உலக்கைராயன் தன் பிடியில் அகப்பட்ட ஒரு குதிரையின் பின்னங்கால்களைப் பிடித்து இழுத்தான். குதிரையும் விழ அதன் மீது அமர்ந்திருந்த

வீரனும் கீழே விழுந்தான். உலக்கைராயன் அவனைத் தூக்கி நிறுத்தி ''அடே. நீ பேசாமல் காட்டிற்கு ஓடிப் போகிறாயா அல்லது உன் கழுத்தை நெரித்து இப்போதே கொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

அப்போது கரடிராயனும் மாமணியும் அங்கே வந்து சேர்ந்தார்கள். மாமணி உலக்கை ராயனிடம் ''உலக்கை! அதோ ஓடும் மந்திரியை விட்டுவிட்டு இந்த அப்பாவி வீரனைப் பிடித்து ஏன் வாட்டுகிறாய்? இவன் என்ன செய்வான் பாவம்? அவர்கள் கொடுக்கும் சம்பளத்திற்காக அவர்கள் கட்டளைப்படி நடந்து தானே ஆக வேண்டும்?'' என்று கேட்டான். கரடிராயனோ ''என் மந்திரக் கோல் என்ன ஆயிற்றோ? அந்த மாயக்குரங்கைப் பிடித்திருந்தால் ஒரு வேளை கிடைத்திருக்கலாம்'' என்றான்.

உலக்கைராயன் தன் கல்கதையை டக்கெனக் கீழே போட்டு விட்டு ''கரடிராயரே! அந்த மாயக்குரங்கு என் மனதைக் கலக்கும் ஒரு செய்தியைக் கூறியது. அவனது குருவான புரட்டு ராயன் என் அண்ணனைக் கொன்று விட்டானாம். இது உண்மையா அல்லது பொய்யா எனத் தெரியவில்லை. ஏனெனில் இந்தப் புளுகு



ராயன் சொல்வதை எல்லாம் நம்பி விட முடியாது'' என்றான்.

கரடிராயனும் ''உன் அண்ணனின் பெயர் என்ன?'' என்று கேட்கவே அவனும் ''காளிராயன் என்பதே அவன் பெயர். நீ எப்போதாவது இதைக் கேட்டிருக்கிறாயா? அவனும் கரடியான் மலையில் தான் இருந்தான்'' என்றான்.

கரடிராயனும் சற்று யோசித்துப் பார்த்து ''ஊஹூம். அந்தப் புரட்டுராயன் என் குருவான கரடியப்பரை அடித்து வீழ்த்தப் பல ஆட்களைக் கூட்டிக் கொண்டு போனான். ஆனால் நான் அந்தக் கூட்டத்திலோ அல்லது தனியாகவோ நீ கூறியபடி காளிராயன்



என்ற பெயரைக் கேட்டதாக ஞாபகம் இல்லை. நீ கூறுவது போல மாயக்குரங்கான அந்தப் புளுகுராயன் சொல்வதை நம்ப முடியாதுதான்'' என்றான்.

உலக்கைராயனும் ''என் அண்ணன் இன்னமும் உயிருடன் இருக்கிறான் என்றே நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். கொஞ்ச காலத்திற்கு முன் சில மந்திரவாதிகள் பிரம்மபுத்திர நதிப் பள்ளத் தாக்கிற்கு வந்து அங்குள்ளவர்களைத் துன்புறுத்தலானார்கள். அவர்களுக்கு பயந்தே நான் அங்கிருந்து கிளம்பி வந்தேன். அவர்களது மந்திர சக்தியின் முன் என் கல்கதை பயனற்றதே. இதற்கு அவ்வளவு சக்தி கிடையாது. ஆனால் கரடியப்பர் மிகுந்த மந்திர சக்தி வாய்ந்தவர் என்று நீ கூறுவதால் நானும் உன்னோடு அப்பகுதிக்கு வருகிறேன். என் அண்ணனைத் தேடிக் கண்டு பிடித்தது போலவும் ஆகும். உங்கள் குருவைப் பார்த்தது போலவும் இருக்கும். நானும்அந்த மந்திரவாதிகளை ஒழிக்க உங்களுக்கு உதவுகிறேன்'' என்றான்.

அதைக் கேட்டுக் கரடிராயன் ''பேஷ். பேஷ். ரொம்ப நல்லதாகப் போயிற்று. நாம் விரைவிலேயே இங்கிருந்து கிளம்பிப் போய்க் கரடியான் மலையை அடைவோம். ஆனால் அதற்கு முன் அந்தப் புளுகுராயன் என்னிடமிருந்து திருடிக் கொண்டு போன மந்திரக் கோலை நான் திரும்ப அடைந்தாக வேண்டும். இந்த சந்திரபுர மன்னனையும் நன்கு தண்டிக்க வேண்டும்'' என்றான்.

அப்போது கரடிமனிதன் பலமாகக் கூக்குரலிட்டும் கூச்சல் போட்டுக் கொண்டும் தன் யானையைத் தலை நகரின் பக்கமாகச் செலுத்தலானான். இவர்கள் எல்லோருக்கும் முன்னதாகச் சந்திர புரத்தை அடைந்தவன் மாயக் குரங்கான புளுகுராயனே.

ஒரு குரங்கு குதிரை மீது அமர்ந்து கோட்டை வாசலுக்கு

வந்து கொண்டிருப்பதைக் கண்டு கோட்டை வாசலில் காவலுக்கு நின்ற வீரர்கள் ''அடேடே! என்ன அதிசயம்! குதிரை மீது குரங்கு!! வேடிக்கையாக இருக்கிறதே'' என்று கத்தினர்கள். பின்னர் வேகமாக வரும் குதிரையை அவர்கள் வழி மறித்தார்கள்.

ஒரு வீரன் ''ஏய் குரங்கே! உன்னுல் பேசமுடியுமா?'' என்று கேட்டான். புளுகுராயன் ''ஏய் காவலாளிகளே! வழி விடுங்கள். நான் குரங்கல்ல. மந்திர சக்தி வாய்ந்த புளுகுராயன். உங்கள் மன்னனுக்குப் பெருத்த ஆபத்து வரப்போகிறது. அதைக் கூறி அவரைக் காப்பாற்றவே நான் போய்க் கொண்டிருக்கிறேன். சட்டென வழியை விட்டு விலகுங்கள்" என்ருன்.

அதைக் கேட்டு அந்த வீரன் மற்றவர்களைப் பார்த்தான். ஆனல் இன்னொரு வீரனே ''நீ புளுகுராயனு? இப்போது நீ சொல்வதெல்லாம் வெறும் புளுகு தானே. உன்னை முதலில் எங்கள் தலைவரிடம் கொண்டு போய் நிறுத்துகிறேன். அப்புறம் நீ எங்கே வேண்டுமானுலும் போய்க் கொள்'' என்று கூறி புளுகுராயன் ஏறி வந்த குதிரையின் கடிவாளத்தைப் பிடிக்கலானுன். அப்போது புளுகுராயன் தன் கையிலிருந்த மந்திரக் கோலால் அந்த வீரனின் வாளைத் தட்டினுன். மறுநிமிடம்





குப்பென நெருப்பு பற்றி எரிந்து அந்த வாள் சாம்பலாகி விட்டது.

அதைக் கண்ட காவல் வீரர்கள் திகைத்துப் போய் நின்றூர்கள். இதே சமயம் புளுகுராயன் தன் குதிரையைக் கோட்டைக்குள் வேகமாக ஓட்டிக் கொண்டு சென் ருன். வீரர்கள் 'பிடி' 'பிடி' எனக் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடி ஞர்கள். சற்று தூரத்தில் நின்று யாருடனே பேசிக் கொண்டிருந்த காவல் வீரர்களின் தலைவன் சட் டெனத் திரும்பிப் பார்த்தான்.

அவன் சட்டென அருகில் இருந்த ஒரு குதிரை மீது பாய்ந்து ஏறி ''இவன் யாரோ எதிரியின் உளவாளி. குரங்கு போல வேஷம் போட்டுக் கொண்டு இங்குள்ள நம் இரகசியங்களை அறிந்து கொண்டு போக வந்திருக்கிருன். உம் வாருங்கள். அவனை பிடிக்க லாம்'' என்ருன்.

இதற்குள் புளுகுராயன் கொஞ்ச தூரம் போய் விட்டான். அப்போது தெருவில் ஒரு மைதானத்தில் ஒரு வித்தைக் காரன் தான் பிடித்த குரங்குகளை யும் கரடிகளையும் கொண்டு பல வித்தைகள் செய்து காட்டிக் கொண்டிருந்தான். அவ்வழியே புளுகுராயன் குதிரை மீது ஏறி வரவே அங்கே கூடி இருந்தவர்கள் ''அடேடே! குரங்கு குதிரை மீதேறி சவாரி செய்கிறதே'' எனக் கூவிக் கைதட்டி ஆர்ப்பரித் தார்கள்.

வித்தைக்காரனும் மாயக்குரங் கைப் பார்த்து அந்த குரங்கு யாரோ ஒரு வித்தைக் காரனுடை யது என்றும் அவனிடமிருந்து தப்பி ஓடி வந்து விட்டது என்றும் எண்ணினன். உடனே தன் கையி லிருந்த கயறில் சுருக்குப் போட்டு அதன் மீது போட்டு இழுத்தான். கயறு புளுகுராயனின் இடுப்பில் சுற்றி இருகியது. வித்தைக்காரன் கயறை இழுக்கவே குதிரை மீதி ருந்து புளுகுராயன் கரணங்கள் போட்டுக் கீழே விழுந்தான். அவன் கையிலிருந்த கரடிராயனின்

மந்திரக் கோல் சற்று தூரத்தில் போய் விழுந்தது.

வித்தைக்காரன் மகிழ்ந்து போய் மாயக் குரங்கின் இரு காதுகளையும் பிடித்துத் தூக்கி நிறுத்தி ''ஏய்! ஏய்! பா! பா!! இனி நீ நான் சொல்கிறபடி ஆட வேண்டும். நான்தான் உன் எஜமானன் தெரிந்ததா?'' என்ருன்.

மாயக் குரங்கு பல்லைக் கடித்த வாறே சுற்றிலும் பார்த்து விட்டு ''ஏய் வித்தைக்காரா! நான் சாதாரணக் குரங்கல்ல. ஒரு மந்திரவாதி. இந்நாட்டிற்கு வரப் போகும் அபாயத்தை மன்னனிடம் கூறவே போய்க் கொண்டிருக்கிறேன். என்னைப் பிடித்து வைத்து அவமானப்படுத்துகிருயா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட வித்தைக்காரன் பயந்து தலையை இப்படியும் அப்படியுமாக ஆட்டினுன். பிறகு தன் கரடிகளின் ஒன்றின் சங்கிலியைப் பிடித்து ஆட்டி ''இதோ இந்தப் பிசாசைப் பிடித்து உலுக்கி நல்ல பாடம் கற்பி பார்க்கலாம்'' என்ருன்.

மறு நிமிடம் கரடி மாயக் குரங்கின் மீது பாய்ந்தது. மாயக் குரங்கோ பயங்கரமாகக் கத்த ''அடே நான் மன்னருக்கு நன்மை செய்யப் போகிறவன். கரடிராயனுல் அவனுக்குப் பெரிய ஆபத்து



வரப் போகிறது. எங்கே மன்னர்? இங்கே வரச் சொல்லுங்கள். என் மந்திரக் கோல் எங்கே போயிற்று?'' என்று கூறிக் கரடி இடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு கரடியைப் பல இடங்களில் பயங்கரமாகக் கடித்தது.

ஒரு கரடிக்கும் ஒரு குரங்கிற்கும் போட்டா போட்டி காட்டா குஸ்தி நடப்பது கண்டு மக்களின் உற்சாகம் கரை புரண்டது. ''ஆகா என்ன ரோஷமான சண்டை! பாருங்கள்'' எனக் கத்தினுர்கள். அது மாதிரி சண்டை இனிப் பார்க்கக் கிடைக்காது எனக் கூறி கை தட்டினுர்கள்.

இதற்குள் காவல் வீரர்களின் தலைவன் அங்கு வந்து சேர்ந்தான், அவன் வித்தைக்காரனிடம் ''இங்கே என்ன ஆர்ப்பாட்டம்? அந்தக் குரங்கு யாருடையது? குரங்கு வேஷத்தில் ஒரு ஒற்றன் வந்திருக்கிறான் உளவு பார்க்க. உன் கரடியை அடக்கு. அது அந்தக் குரங்கைக் கொன்று விடப் போகிறது. பிறகு எதுவும் தெரியாமல் போய் விடும்'' என்றான்.

வித்தைக்காரன் மறு நிமிடமே தன் கரடிராயன் சங்கிலியைப் பிடித்து இழுத்துக் கட்டுப்படுத்தினான். மாயக் குரங்கோ தன் உடலில் ஏற்பட்ட காயங்களைப் பார்த்து முனகியவாறே ''உங்கள் மன்னனைக் காப்பாற்ற வந்த எனக்கு இப்படிப் பட்ட கேவலமான ஒரு நிலையா? யாராவது போய் மன்னரை இங்கே வரச் சொல்லுங்கள்'' என்றான்.

அதைக் கேட்ட காவல் வீரர்களின் தலைவன் ''ஏய் குரங்கே! உன் லட்சணத்திற்கு எங்கள் மன்னர் உன்னைக் காணவா வர வேண்டும்? இரு இரு'' எனக் கூறி வித்தைக்காரனிடம் ''இதோ பாரப்பா. இந்தக் குரங்கை உயிரோடு பிடித்து இழுத்து வா. மன்னர் முன் இதனைக் கொண்டு போய் நிறுத்தலாம்'' என்றனர்.

மறு நிமிடம் தன் கரடியை வித்தைக்காரன் ஏவவே அது ஓடிப் போய் சட்டென மாயக் குரங்கை அலாக்காகத் தூக்கித் தன் தோளின் மீது போட்டுக் கொண்டது. வித்தைக்காரன் முன்னதாக வழி காட்டிக் கொண்டு அரண்மனைக்குச் செல்ல கரடி மாயக் குரங்கோடு அவன் பின்னால் சென்றது மக்கள் கூட்டமும் கத்திக் கொண்டு உற்சாகத்துடன் அதன் பின்னால் சென்றது.

மாயக்குரங்கோ ''என் மந்திரக் கோல்! என் மந்திரக் கோல்!!'' எனக் கத்திக் கொண்டே இருந்தது.





# ஏன் சொல்லவில்லையா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினன். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, மனிதன் மாறுகிறன். அவன் அதிர்ஷ்டம் மாறுகிறது. ஆனல் இந்த மாறுதல்களுக்கான காரணங்களைச் சுலபமாகக் கண்டு பிடிக்க முடிவதில்லை. இதற்கு உதாரணமாக காசிநாதன் என்பவனின் கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

காசிநாதன் தனது தாய் தந்தையரின் ஒரே மகன். ஆனல் அவன் தன் தந்தைக்கு எவ்விதத்திலும்

## வேதாளம் சொல்லும் கதை



உதவாது பயனற்று இருந்தான். எங்கெங்கோ திரிந்து விட்டுச் சாப்பாட்டு வேளைக்கு வீட்டிற்கு வந்து சாப்பிட்டு விட்டுப் போவான். அவனது தாய் அவனுக்குச் சாப்பாடு போடும் போது நற்புத்தி புகட்ட முயல்வாள். அவன் பொறுப்பை உணர வேண்டும் என்று உரைப்பாள். ஆனால் அவன் காதில் எதுவுமே விழாமல் இருந்தது. ஒரு நாள் அவனது தந்தை அவனை நன்றாகத் திட்டி விட்டார். அதைக் கேட்டு ரோஷமும் ஆத்திரமும் கொண்டு தன் தந்தை காரணமில்லாமல் தன்னை திட்டுவதாக எண்ணி வீட்டை விட்டே போய் விட்டான்.

அன்று முழுவதும் அவன் நடந்து ஒரு காட்டிற்குள் போய்ச் சேர்ந்தான். இருட்டி விட்டது. அங்கே ஒரு பாழடைந்த காளி கோவிலைக் கண்டு அங்கு போய் உட்கார்ந்தான். தான் வீட்டை விட்டு வந்தது எவ்வளவு தவறாய்ப் போய் விட்டது என்பது அவனுக்கு அப்போதுதான் தெரிந்தது.

அப்போது அவன் இருந்த இடத்தில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு கிழவன் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்கியவாறே இறங்கி ''தம்பீ, எனக்கு மூச்சு விடவே சிரமமாயிருக்கிறது. இந்த வண்டியில் பூட்டியுள்ள எருதுகளை அவிழ்த்து அவற்றிற்கு கொஞ்சம் வைக்கோலைப் போடு. நான் சற்று படுத்திருக்கிறேன்'' என்றான். காசிநாதனும் எழுந்து போய் வண்டியை ஒரு பக்கமாக நிறுத்தி எருதுகளை அவிழ்த்து ஒரு மரத்தில் கட்டி அவற்றின் முன் வண்டியிலிருந்து வைக்கோலை எடுத்துப் போட்டான்.

அக்கிழவனின் பெயர் கோபால சாமி. அவன் காசிநாதனிடம் தன்னைப் பற்றிக் கூறி ''தம்பீ. உன்னை பார்த்தால் என் மகனையே பார்ப்பதுபோல இருக்கிறது. அவன் சிறு வயதிலேயே தாயாரை இழந்ததால் நான்தான் அவனுக்குத் தாய் தந்தை எல்லாமே. அவன்

நல்லவனுக பெயர் பெற்று முன்னுக்கு வருவான் என எதிர்பார்த்தேன். ஆனுல் அவன் கெட்டவர்களுடன் சேர்ந்து பலவிதக் குற்றங்களைச் செய்து அரசாங்க வீரர்கள் கையில் அகப்படாமல் ஓடிப் போய்விட்டான். அவன் எங்கே போனுன் என்பது கூடத் தெரியவில்லை'' என்ருன்.

அதைக் கேட்ட காசிநாதன் ''இனி நடந்து போனதைப் பற்றி கவலைப்பட்டு என்ன பயன்? அவனுக்கே ஒரு நாள் நல்ல புத்தி வந்து திரும்பி வருவான். கவலைப் படாதீர்கள்'' என்று ஆறுதல் கூறினுன். ஏனெனில் அப்போது தானே காசிநாதனுக்கும் புத்தி வந்திருந்தது.

கோபாலசாமி ''ஆகா! தங்கமான பையன் நீ! எப்படி நல்ல வார்த்தைகளைச் சொல்கிருய். உன்னைப் பெற்றவர்கள் பாக்கியசாலிகள்'' என்ருன். அப்போது அவனுக்கு அடக்க முடியாத இருமல் வந்து விட்டது. அவன் மூச்சு வாங்கியவாறே ''தம்பீ! இனி நான் பிழைக்கமாட்டேன். எனக்கு சொத்து எதுவும் இல்லை. இருப்பதெல்லாம் இந்த வண்டியும் மாடுகளுமே. நீ இதனை விற்று என் ஈமச்சடங்குகளைச் செய். மருதூரில் என் நண்பன் சொக்கப்பன் என்பவன் இருக்கிருன். அவனிடம் என்னைப்பற்றிச் சொல், உனக்கு உதவுவான்'' எனக் கூறி விட்டு உயிரை விட்டான்.





மறு நாள் காலையானதும் காசிநாதன் அங்கேயே ஒரு குழியைத் தோண்டி கோபாலசாமியின் உடலைப் புதைத்து விட்டு வண்டியை ஓட்டிக் கொண்டு சென்றான். ஒரு ஊரை அடைந்ததும் ஓரிடத்தில் வண்டியை நிறுத்தி மாடுகளை ஒரு மரத்தில் கட்டி விட்டு பக்கத்தில் இருந்த ஒரு மரத்திலிருந்து பழங்களைப் பறித்து சாப்பிடலானான்.

அப்போது அங்கு வந்த அந்த மரத்தின் சொந்தக்காரன் ''யாரப்பா நீ? கேட்காமல் கொள்ளாமல் பழங்களைப் பறித்து சாப்பிடுகிறாயே'' என்று கேட்டான். அதற்கு காசிநாதனும் ''ஐயா, நான் இரண்டு நாட்களாகப் பட்டினி. எதுவும் சாப்பிடவில்லை. மருதூர் போகவேண்டும். வழியில் இப்பழங்களைப் பறித்து சாப்பிட்டேன். மன்னித்து விடுங்கள்'' என்றான்.

அதற்கு அந்த மரத்தின் சொந்தக்காரன் ''மருதூருக்கா! இது தானே அந்த ஊர். யார் வீட்டிற்குப் போகவேண்டும்?'' என்று கேட்டான். காசிநாதனும் ''ஓ! அப்படியா? இங்கே சொக்கப்பா என்பவரின் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டான். அதற்கு அவன் ''நான் தான் சொக்கப்பா. என்ன விஷயம்? நீ யார்?'' என்று கேட்டான். காசிநாதனும் காட்டில் கோபாலசாமி இறந்ததைக் கூறினான்.

''அட பாவமே! கோபாலசாமி இறந்து விட்டானா? அவன் மகனா நீ? சரி வா'' என்று அவன் தன் நண்பனுக்காகக் கண்ணீர் உகுத்தவாறே காசிநாதனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போனான். தன் மனைவியிடம் கோபாலசாமியின் மகன் எனக் காசிநாதனை அறிமுகம் செய்து வைத்தான். கோபாலசாமி இறந்ததை சொக்கப்பா கூற அவளும் ''ஐயோ, பாவம்! எவ்வளவு நல்லவர்'' எனக் கூறிக் கண்ணீர் வடித்தாள். கோபாலசாமிக்குச் செய்ய

வேண்டிய ஈமச்சடங்குகள் முடிந்தன. அதுவரை சொக்கப்பா காசிநாதனைத் தன் வீட்டிலேயே வைத்திருந்தான். மிகவும் குறும்பும் போக்கிரித்தனமும் செய்த பையனா இப்படி அடக்க ஒடுக்கமுள்ளவனாக மாறி விட்டான். என சொக்கப்பா காசிநாதனைப் பார்த்து எண்ணி ஆச்சரியப் பட்டான். காசிநாதன் இனி தான் கிளம்பிப் போவதாக சொக்கப்பாவிடம் சொன்னான்.

சொக்கப்பா அவன் விஷயமாகத் தன் மனைவியிடம் பேசி ஒரு முடிவுக்கு வந்து விட்டான். எனவே காசிநாதனிடம் ''நீ எங்கேயப்பா போகப்போகிறாய்? உன் தந்தையோ இறந்து விட்டார். உனக்கு சொத்து எதுவும் இல்லை. உறவினர்கள் என்றும் யாரும் இல்லை. அதனால் பேசாமல் என் வீட்டிலேயே இரு. என் மகளையே உனக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன். என் நிலபுலன்களை நீ பார்த்துக் கொள்ளலாம்'' என்றான்.

காசிநாதனும் அதற்கு இணங்கி சொக்கப்பாவின் மாப்பிள்ளையாகி அதே வீட்டில் இருந்து சுகமாகக் காலம் கழித்து வரலானான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! காசிநாதன் தன் தந்தைக்குச் சற்றும் பயனற்றவனாக



இருந்தானே. ஆனால் கோபாலசாமியை சில நிமிட நேரங்களே கண்டு அவனைத் தன் தந்தையாக ஏற்று அவன் சொற்படியெல்லாம் நடந்து அவனுக்கு ஈமச்சடங்குகளையும் செய்தானே. பின் சொக்கப்பாவின் வார்த்தைக்கும் கட்டுப்பட்டானே. காசிநாதனிடம் தோன்றிய இந்த மாற்றம் உண்மையானதா? தான் கோபாலசாமியின் மகனல்ல என்ற உண்மையை அவன் சொக்கப்பாவிடம் கூறாமல் இருந்தது ஏமாற்று வேலைதானே! இச் சந்தேகங்களைத் தீர்க்க உனக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை

வெடித்துச் சுக்கு நூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''தந்தைக்கும் மகனுக்கும் உள்ள தொடர்பு அறுந்தது என்ருல் அதற்குக் காரணங்கள் பல இருக்கும். மகன் மட்டுமே காரணமல்ல, தந்தையும் கூடத்தான். தந்தை தன்னை அகாரணமாகக் கோபித்துக் கொண்டார் என உறுதியாக நம்பியே காசிநாதன் வீட்டை விட்டு வெளியேறினுன். கோபாலசாமியின் மகனே பல குற்றங்களைச் செய்து விட்டு பயந்து வீட்டை விட்டு ஓடியவன். முன்பின் அறியாத கோபாலசாமியிடம் காசிநாதன் அன்பு கொண்டான் என்ருல் அவனிடம் உள்ள நல்ல இயல்புகளையே அது காட்டுகிறது. அவன் இறந்து போனவனுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினுன். காசிநாதனிடம் நற்குணங்கள் இருப்பதை சொக்கப்பாவும் கண்டான். எனவேதான் அவன் தன் மகளைக் காசிநாதனுக்குக் கல்யாணம் செய்து வைத்தான். தான் கோபாலசாமியின் மகனல்ல என்று காசிநாதன் சொக்கப்பாவிடம் சொல்லாதது அவனை ஏமாற்ற வேண்டும் என்பதற்காக அல்ல. கோபாலசாமியின் ஈமச்சடங்குகளைச் செய்து முடிக்கவே அவ்வாறு இருந்தான். அது முடிந்ததும் அவன் அங்கிருந்து சென்று விடவும் முயன்ருன். ஆனுல் சொக்கப்பா அவனிடம் தன் நண்பன் கோபாலசாமியின் நற்குணங்கள் இருப்பது கண்டு மகிழவே அந்த மகிழ்ச்சியை ஏன் கெடுக்க வேண்டும் என்றே காசிநாதன் உண்மையைக் கூறவில்லை" என்ருன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அறிவைப் பாருங்கள்!

வீரசேனன் என்ற மன்னன் தன் அண்டை நாட்டின் மீது படை எடுக்க விரும்பினான். அவனது மந்திரியோ ''அரசே. அந்நாட்டு மந்திரி புத்தி சாலியாக இருந்தால் நாம் அந்நாட்டின் மீது படை எடுத்துப் போக வேண்டாம். ஏனென்றால் அவர் நமது படை எடுப்பை எப்படியாவது முறியடித்து விடுவார். எனவே அதை முதலில் அறிந்து கொள்ளலாம்'' எனச் சொல்லி ஒரு தூதனை அந்நாட்டிற்கு அனுப்பினான்.

தூதனும் வீரசேனன் கூறியபடி அந்நாட்டு மன்னனிடம் ''அரசே, எங்கள் மன்னர் இறந்தாலும் உயிர் பெற செய்பவனையும் உயிருடன் இருப்பவனை இறக்காமல் செய்பவனையும் அனுப்பி வைக்குமாறு சொல்லச் சொன்னார்'' என்றான். உடனே அந்நாட்டு மந்திரி திவசம் செய்து வைக்கும் ஒரு புரோகிதரையும் ஒரு வைத்தியரையும் அவனுடன் அனுப்பி வைத்தார்.

வீரசேனனின் மந்திரி அந்த இருவருக்கும் நிறையப் பணம் கொடுத்து அனுப்பி விட்டு வீரசேனனிடம் ''அரசே, அண்டை நாட்டு மந்திரி மிகவும் புத்திசாலி. இறந்தாலும் உயிர் பெறச் செய்ய அதற்கான மந்திரங்கள் கூறி இறந்தவர்களுக்குப் பிண்டம் வைக்கச் சொல்லும் புரோகிதரை அனுப்பினார். உயிருடன் இருப்பவனை இறக்காமல் செய்ய ஒரு வைத்தியனை அனுப்பினார். எனவே கூரிய அறிவு படைத்த இந்த மந்திரி சரியான யோசனையையே அரசனுக்குக் கூறுவார்'' என்றான்.



# வெட்டு கிணறைச் சட்டென்று!

தர்மபுரம் ஜமீன்தாரர் தனக்குப் பெயர் வரும்படிப் பார்த்துக் கொள் வாரே தவிர தம் ஜமீனில் உள்ள மக்களுக்கு நன்மை செய்ய மாட் டார். ஒரு முறை அந்த ஜமீனில் ஒரு கிராமத்தில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற் படவே ஊரார் ஒன்று கூடி ஜமீன்தாரரிடம் ஒரு கிணறு வெட்டித் தரும் படி வேண்டினுர்கள். அவரோ மசியவில்லே. அப்போது முருகன் என்ற அவ்வூர் இளேஞன் ஊராரிடம் பணம் வசூலித்துக் கிணறு வெட்டலானுன். ஆனுல் ஆழமாக வெட்டியும் பாறையாக இருந்தது. அந்தப் பாறையைத் தகர்க்க வேண்டுமானுல் நிறைய செலவு செய்ய வெண்டும்.

அவனுக்கு ஒரு உபாயம் தோன்றியது ஒரு நாள் இரவு ஒரு டின் மண்ணெண்ணெயை எடுத்துப் போய் வெட்டிய கிணறில் பாறை மீது விட்டான். மறு நாள் அவ்வூரில், கிணறு வெட்டியதில் மண்ணெண்ணெய் வந்ததாகச் செய்தியைப் பரப்பினுன். ஜமீன்தாரர் ஓடோடி வந்தார். கிணற்றில் இறங்கி மண்ணெண்ணெய் கசிந்திருப்பதைப் பார்த்து விட்டு உடனே தன் ஆட்களேக் கொண்டு பாறையைத் தகர்த்து ஆழமாக வெட் டச் சொன்னுர். அவர்கள் பாறையைத் தகர்த்து ஆழமாக வெட்டியதும் தண்ணீர் ஊற்றிலிருந்து 'குபு' 'குபு' வென்று வந்தது. முருகனின் தந் திரத்தால் ஊரின் குடி நீர்ப் பிரச்னே தீர்ந்தது.





# பட்சணப்பிசாசுகள்

குட்டப்பன் சிறுவயதிலிருந்தே தன் தாய்க்குச் சமையலில் உதவி பல பட்சணங்கள் செய்யக் கற்றுக் கொண்டான். அவனது தாய் இறந்து போகவே அவன் அருகே இருந்த ஊருக்குப் போய்க் கடைத் தெருவில் பட்சணக் கடை ஒன்றைத் திறந்தான்.

முதல் நாள் மாலைவரை நல்ல வியாபாரம் நடைபெற்றது. மாலை ஏழுமணி ஆனதும் மற்ற பட்சணக் கடைக்காரர்கள் தம் கடைகளை மூடுவதை அவன் கவனித்தான். ஒரு கடைக்காரன் குட்டப்பனிடம் வந்து "ஏன், நீ கடையை மூட வில்லையா?" என்று கேட்டான்.

குட்டப்பனும் "இப்போதேயா? பத்து மணிவரையாவது வியாபாரம் நடத்தலாம் என நினைக்கிறேன்" என்றான். அதற்கு அந்தக் கடைக்காரன் "நீ ஊருக்குப் புதியவன். அதனால் தான் உனக்கு விஷயம் தெரியவில்லை. சாயங்காலம் ஆனதும் இரண்டு பிசாசுகள் கடைத்தெருவில் வந்து உலாவுகின்றன. அவை தித்திப்புப் பட்சணங்களையெல்லாம் தூக்கிக் கொண்டு போய் விடுகின்றன. எனவே அவை வரும் முன்பே நாங்கள் கடைகளை மூடி விட்டுப் போய் விடுகிறோம்" என்றான்.

குட்டப்பனுக்குப் பேய் பிசாசு என்றால் கொஞ்சமும் பயம் இல்லை. எனவே எந்தப் பிசாசும் தன்னை ஒன்றும் செய்யாது என்ற தைரியத்தோடு குட்டப்பன் கடையை மூடாமல் உட்கார்ந்திருந்தான்.

சற்று நேரத்திற்குப் பின் இரு பெண்கள் தன் கடைக்கு வருவதை அவன் பார்த்தான். அவன் குறிப்பாக அவர்களது கால்களைப் பார்த்தான். அவை நிலத்தில் பதிந்தி

மரகதம் ராமன்



ராமல் நிலத்திற்கு அரை அடி மேலே காற்றில் மிதப்பது போல இருந்ததை கவனித்து அவையே கடைக்காரர்கள் குறிப்பிடும் பட்சணப் பிசாசுகள் என ஊகித்துக் கொண்டான்.

அவர்கள் தாயும் மகளும் போல இருந்தார்கள். இருவரும் அட்டகாசமாகச் சிரித்தவாறே குட்டப்பனின் கடைக்குள் நுழைந்தார்கள். குட்டப்பனும் அவர்களை வரவேற்று ''என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

தாயாராகத் தென்பட்டவள் ''நாளை இரவு என் பெண்ணிற்குக் கல்யாணம். அதற்குப் பதினைந்து கூடை லட்டுகள் தேவை. செய்து கொடுக்க முடியுமா?'' என்று கேட்டாள்.

குட்டப்பனோ ''ஆகா! தாராளமாகச் செய்து கொடுக்கிறேன். ஆனால் சர்க்கரையும் நெய்யும் வாங்கப் பணம் வேண்டும். நீங்கள் முன் பணம் கொஞ்சம் கொடுத்தால் பாக்கியை லட்டுகள் செய்து கொடுத்து விட்டு வாங்கிக் கொள்கிறேன்'' என்றான்.

தாய் ஒரு பணப் பையை எடுத்துக் கொடுத்து ''இதில் ஐநூறு ரூபாய் இருக்கிறது. பாக்கியை நாளைக்கு லட்டுகளை எடுத்துப் போகுமுன் கொடுக்கிறேன். லட்டுகள் பிரமாதமாய் இருக்கவேண்டும் தெரிந்ததா'' என்றாள்.

குட்டப்பனும் ''அதெல்லாம் கவலைப்படாதீர்கள். ஜமாய்த்து விடுகிறேன்'' என்று கூறி அவள் கொடுத்த பணத்தை வாங்கிப் பெட்டிக்குள் போட்டு பூட்டினான். தாயும் மகளும் கடையை விட்டு வெளியே சென்றார்கள்.

வெளியே போனதும் மகள் பிசாசு தாய்ப் பிசாசிடம் ''ஏனம்மா அவனுக்குப் பணம் கொடுத்தாய்? பணம் கொடுக்காமல் பட்சணத்தை எடுத்துச் சாப்பிடுவது தான் குஷி. ருசியாகவும் இருக்கும்'' என்றது.

தாய்ப் பிசாசோ சிரித்துக் கொண்டே ''இவன் புதியவன்.

இப்படி இவனை ஏமாற்றி நாளை லட்டுகளோடு நான் கொடுத்த பணத்தையும் எடுத்துக் கொண்டு போய் விடுவேன். கவலைப் படாதே" என்றது. அதைக் கேட்டு மகள் பிசாசு ''பேஷ் பேஷ். சரி யான திட்டம்'' என்றாள்.

மறு நாள் குட்டப்பன் பதினைந்து கூடைகளை வாங்கிக் கடையின் கொல்லைப்புறத்தில் வைத்தான். அதற்குப் பக்கத்தின் நீளமான கோட்டை அடுப்பை வெட்டி விட்டுக் கடையில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

மாலையாகி இருட்டி விட்டது அப்போது தாயும் மகளுமான பிசாசுகள் அங்கு வந்தன. குட்டப்பனும் ''வரவேண்டும்! வரவேண்டும்! மணப் பெண்ணிற்கு முன் கூட்டியே என் ஆசிகள்'' என்று வாய் நிறையக் கூறி வரவேற்றான்.

தாயும் ''எல்லோரும் காத்துக் கொண்டிருப்பார்கள். லட்டுகள் தயாராகி விட்டனவா?" என்றாள். குட்டப்பனும் ''கொஞ்சம் உள்ளே வாருங்கள்'' எனக் கூறி அவர்களைக் கொல்லைப்புறத்திற்கு அழைத்துப் போனான். அங்கு கூடைகள் இருப்பது கண்டு தாய்ப் பிசாசு சந்தோஷப்பட்டது. ஆனால் கூடையருகே போய் எல்லாம் காலியாக இருப்பது கண்டு ''இதென்ன மோசம்? ஒரு லட்டு கூட இல்லையே'' என்றது.

குட்டப்பனும் ''அதைச் சொல்லத்தான் உங்களை இங்கே கூப்பிட்



டது. இவ்வூரில் இரண்டு பிசாசுகள் திரிகின்றனவாம். அவை சாயந்திரமான பிறகு வந்து தித்திப்புப் பட்சணங்களை எடுத்துக் கொண்டுபோய் விடுகின்றனவாம். நான் லட்டுகளை இப்போது செய்து வைத்திருந்தால் அவை தூக்கிக் கொண்டே போயிருக்கும். அதற்காக ஒரு வழி செய்திருக்கிறேன். இவ்வூர் மந்திரவாதி மங்காபதியைக் கூப்பிட்டிருக்கிறேன். அவன் வேப்பங்கட்டைகளைப் போட்டு ஹோமம் செய்து அந்தப் பிசாசுகளைக் கட்டி ஹோமத்தீயில் போட்டு விடுவதாகக் கூறி இருக்கிறான். இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவான். அப்படி அவன் அந்த பிசாசுகளை ஒழித்த மறு நிமிடமே நான் மளமளவென்று அடுப்பு மூட்டி பூந்தி தேய்த்து பாகில் போட்டு ஊற வைத்து முந்திரி, திராட்சை, ஏலக்காய், கிராம்பு, குங்குமப் பூ, பச்சைக் கற்பூரம் ஆகியவற்றைப் போட்டு லட்டுகளைப் பிடித்துக் கொடுக்கிறேன். நீங்கள் எடுத்துக் கொண்டு போகலாம்'' என்றான்.

இதே சமயம் ஒரு குரல் ''குட்டப்பா, வேப்பங்கட்டைகள் கொண்டு வந்து விட்டேன். இதோ குளித்தும் ஆகி விட்டது. வேஷ்டி கட்டிக் கொண்டு வந்து விடுகிறேன். ஹோமத்தை ஆரம்பிக்கலாம்'' என்றது. குட்டப்பனும் ''இதோ மந்திரவாதி மங்காபதியும் வந்து விட்டார்'' என்றான்.

மறு நிமிடமே தாய்ப் பிசாசும் மகள் பிசாசும் அங்கே இருந்து ஓடி விட்டன. அதற்குப் பிறகு அவை அந்த ஊர்ப்பக்கம் தலை காட்டவில்லை. குட்டப்பன் பிசாசுகள் தனக்குக் கொடுத்தப் பணத்தை மற்ற கடைக்காரர்களிடம் காட்டி தான் பிசாசுகளை விரட்டிய விதத்தைக் கூறினான். அவர்கள் எல்லோரும் அவனைப் பெரிதும் பாராட்டினார்கள்.





# யாக்ஞவல்கர்

யாக்ஞவல்கர் விசுவாமித்திரர் சந்ததியில் வந்தவர். விசுவாமித்திரர் தேவராதன் என்பவனை வளர்த்து வந்தார். தேவராதன் சிவனைக் குறித்து தவம் செய்ய அவரும் அவன் முன் தோன்றினார். அப்போது தேவராதன் ''எனக்கு உங்களைப் போன்ற மகன் பிறக்க வரம் அருள்வீர்'' என்று வரம் கேட்டான்.

சிவனோ ''சிவன் ஒருவர் தான் இருக்க முடியும். வேண்டுமானால் நானே உன் மகனாகப் பிறந்து உலகில் சுக்லயஜுர்வேதத்தைப் பரப்புகிறேன்'' என்றார். தேவராதனும் வீடு திரும்பி யாகம் செய்தான் யாகமேடையிலிருந்து ஒளி வீசும் பாலன் ஒருவன் தோன்றினான். தேவராதன் அவனை எடுத்து யாக்ஞவல்கன் என்ற பெயரிட்டு வளர்த்து வரலானான்.

யாக்ஞவல்கர் வைசம்பாயனரின் சீடராகிப் புகழ்பெற்றார். அவர் ருக், சாம, அதர்வண வேதங்களை மற்ற முனிவர்களிடமிருந்து கற்றுக் கொண்டு யஜுர் வேதத்தை மட்டும் வைசம்பாயனரிடம் கற்றாராம். சுக்ல, கிருஷ்ண, யஜுர்வேதப் பிரிவுகளில் முதலாவதைப் பரப்பியவர் இவரே.

வைசம்பாயனர் வியாசரின் சீடர்களில் ஒருவர். ஒரு முறை வைசம்பாயனரை பிரம்மஹத்தி தோஷம் பற்றிக் கொண்டது. வைசம்பாயனர் ஒரு நாள் தம் சீடர்களோடு இந்திரவஜ்ஜிரஸ் தவமந்திரத்தை ஓதிக் கொண்டிருக்கும் போது ஒரு பிராம்மணச் சிறுவன் மத்தியில் ஓடி வந்தானாம். வைசம்பாயனர் தம் கையிலுள்ள தர்ப்பைப் புல்லால் அவனை ஒரு தட்டு தட்டவே அது வஜ்ஜிராயுத

மாக மாறி அச்சிறுவனைக் கொன்று விட்டது. இப்படியாக அவரை பிரம்மஹத்தி தோஷம் பற்றியது.

தன் பிரம்மஹத்தி தோஷத்தை யார் வாங்கிக் கொள்வார்கள் என்று தம் சீடர்களிடம் அவர் கேட்டார். யாக்ஞவல்கர் ''நான் வாங்கிக் கொள்கிறேன். பிறகு அதனை நான் வெகு சுலபமாகப் போக்கிக் கொண்டும் விடுவேன்'' என்றார்.

அதைக் கேட்ட வைசம்பாயனர் கோபம் கொண்டு ''உனக்கு இவ் வளவு கர்வமா? மரியாதையாக நான் கற்றுக் கொடுத்ததை எல் லாம் எனக்கே திருப்பிக் கொடுத்து விட்டுப் போய் விடு'' என்றார்.

அவர் வைசம்பாயனரிடம் கற்ற வற்றையெல்லாம் திரும்ப அவரி டமே கொடுத்து விட்டு பின்னர் சூரியனை ஆராதித்து அவனிட மிருந்து யஜுர்வேதத்தைக் கற்றுக் கொண்டார். இது எவ்வளவு தூரம் உண்மை எனக் கூற முடி யாது. ஏனெனில் வேதங்களை வகுத்த வியாசர் யஜுர்வேதத்தை வைசம்பாயனருக்குத் தான் கற்றுக் கொடுத்தாராம். எனவே வைசம்பாயனருக்கும் யாக்ஞவல் கருக்குமிடையே ஒருவர் வந்து கற்றுக் கொடுக்க வேண்டிய வாய்ப்பே இல்லை.

மைத்திரேயி, காத்யாயினி என்ற இரு மனைவியர் யாக்ஞவல் கருக்கு இருந்தனர். அவர் வீட்டை விட்டுத் தவம் செய்யப் போகுமுன் தன் சொத்தை அவர் கள் இருவருக்கும் பகிர்ந்து கொடுத்தார். ஆனால் மைத்தி ரேயி ''நீங்கள் இந்த சொத்தை விட பலமடங்கு மதிப்புள்ள பொருளைத் தேடிச் செல்கிறீர்கள். நீங்களே விரும்பாத இந்த சொத் தும் சுகமும் எனக்கு மட்டும் எதற்கு?'' எனக் கூறி ஏற்க மறுத்துத் தன் கணவனிடமே ஞானோபதேசம் பெற்றாள்.





# இந்திரப்பதவியை அடைந்த மன்னன்

ஒரு முறை இந்திரன் விசுவருபன் என்பவனைக் கொன்று விட்டு அந்தப் பாவத்திற்கு பயந்து ஓடி எங்கோ ஒரு குளத்தின் மத்தியில் ஒளிந்து கொண்டான். இந்திரப் பதவி காலியாகியது.

அப்போது பூவுலகில் நகுஷன் என்ற பெயர் பெற்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் அரக்கர் களைக் கொன்று யாகங்கள் செய்து சிறந்த மனிதனெனப் பெயர் பெற்ருன்.







காலியாக இந்திரப் பதவி இருப் பது சரியல்ல என எண்ணிய தேவர்கள் தமக்குள் கலந்து ஆலோசித்து நகுஷனுக்கு இந்திரப் பதவி அளிப்பது என்று முடிவு செய்தார்கள்.



ரிஷிகளும் தேவர்களும் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி தேவ லோகம் போய் நகுஷன் இந்திரனின் சிம்மாசனத்தில் அமர்ந்தான். இப்படியாக ஒரு மானிடனுக்கு இந்திரப் பதவி கிடைத்தது.



கொஞ்ச காலம் வரை நகுஷன் அடக்கத்துடன் இருந்தான். ஆனால் பதவி அவனை கர்வம் கொள்ளச் செய்தது. அவன் ஒரு நாள் இந்திரனின் மனைவியான சசிதேவியைப் பார்த்து விட்டான்.



அவன் இந்திர சபையிலேயே தேவர்களிடம் ''இப்போது நான் தானே இந்திரன். எனவே சசி தேவி என் மனைவியாகத்தான் இருந்து வர வேண்டும்'' என்றான். இதைக் கேட்டு தேவர்கள் திகைத்தார்கள்.




சசிதேவிக்கு இந்த விஷயம் தெரிய வரவே அவள் மிகவும் பயந்து போய் தேவகுருவான பிரகஸ்பதியிடம் யோசனை கேட்டாள்.






பிரகஸ்பதியும் ஒரு யோசனையைக் கூறினர். அதன்படி சசிதேவி நகுஷனுக்கு ''நீங்கள் பல்லக்கில் ஏறி வர வேண்டும். அதனைச் சப்த ரிஷிகள் சுமந்து வந்து என் வீட்டு வாசலில் வைக்க வேண்டும். அப்போது நான் உமது மனைவி ஆகிறேன்'' என்ருள்.




சப்தரிஷிகளில் அகஸ்தியர் மிகவும் குட்டையானவர். அவரால் பல்லக்கை சுமந்து கொண்டு வேகமாக நடக்க முடியவில்லை. பல்லக்கில் இருந்த நகுஷனே அவரை வேகமாக நடக்கச் சொல்லிக் காலால் உதைத்தான்.



அகஸ்தியர் கோபமடைந்து தன்
னைக் காலால் உதைத்த நகுஷனை
காலே இல்லாத ஜீவராசியான
பாம்பாகப் போகும்படிச் சபித்தார்.
நகுஷன் பாம்பாக மாறி பூவுலகில்
வந்து விழுந்தான்.

அகஸ்தியர் நகுஷன் மீது இரக்கப்
பட்டு ஒரு தர்மாத்மாவினால் அவன்
சாபம் தீரும் என சாபவிமோசனம்
கொடுத்தார். ஒரு நாள் பாம்பான
நகுஷன் பாண்டவர்களில் பீமனைப்
பற்றிக் கொண்டான்.





தன் தம்பியான பீமனை விடுவிக்கு
மாறு நகுஷனிடம் தருமர் கேட்க
நகுஷன் சில கேள்விகளை அவரி
டம் கேட்டு சரியான பதில்களைப்
பெற்றான். இதனால் பீமனும்
விடுதலை அடைந்தான். நகுஷனுக்
கும் சாபவிமோசனம் கிடைத்தது.



# அரசனே வைசியன்

நாபாகன் என்ற அரசகுமாரன் சுபிரபா என்ற வைசியப் பெண்ணை மணக்க விரும்பினான். அவன் அப் பெண்ணின் தந்தையிடம் அவனது மகளைத் தனக்குக் கல்யாணம் செய்து வைக்கும்படி கூறினான். சுபிரபாவின் தந்தையோ "ஒரு க்ஷத்திரியன் ஒரு வைசியப் பெண்ணை மணந்து கொள்வது முறையல்ல. உன் தந்தையும் இந் நாட்டு மன்னருமான திருஷ்டரிடமே இது பற்றிக் கேட்போம்" என்றான்.

இருவரும் திருஷ்டனிடம் போய் விஷயத்தைக் கூறினர். திருஷ்டனும் "என் மகன் ஒரு வைசியப் பெண்ணை மணந்து கொள்ளக் கூடாது" எனக் கூறி விட்டான். ஆனால் நாபாகன் தன் தந்தை கூறியதையும் பொருட்படுத்தாமல் சுபிரபாவைக் கவர்ந்து சென்று ராட்சஸ விவாகம் செய்து கொண்டு விட்டான்.

சுபிரபாவின் தந்தை மறுபடியும் அரசனைக் கண்டு இளவரசன் செய்தது அநியாயம் எனக் கூறவே திருஷ்டன் தன் மகனை நாபாகனுடன் சண்டையிடத் தொடங்கினான். அப்போது அங்கு வந்த சன்னியாசி திருஷ்டனிடம் "உன் மகன் ஒரு வைசியப் பெண்ணை மணந்து கொண்டதால் அவன் வைசியனாகி விட்டான். நீயோ க்ஷத்திரியன். ஒரு க்ஷத்திரியன் வைசியனுடன் சண்டையிடுவது சரியல்ல" என்றார். உடனே திருஷ்டன் சண்டையை நிறுத்தி விட்டான்.

நாபாகன் இனி வைசியர்களின் தொழிலை மேற்கொள்ள வேண்டுமென திருஷ்டன் கட்டளையிட்டான். அவனும் வியாபாரம்

செய்யலானான். நாபாகனுக்கும் சுபிரபாவிற்கும் ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு பனந்தன் எனப் பெயரிட்டனர். அவன் பெரியவனானதும் தான் எப்படியும் நாட்டை அடைந்து ஆள்வது எனத் தீர்மானித்துக் கொண்டான்.

தனது இந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள இமயமலைக்குப் போய் அவன் நீபன் என்ற ராஜரிஷியைக் கண்டான். அவரிடம் பனந்தன் தன் பிரச்னையைக் கூறினான். அவரும் அவனுக்கு அஸ்திர சஸ்திரங்களில் பயிற்சி அளித்தார்.

பனந்தன் போர்க்கலையில் நன்கு தேர்ச்சி பெற்றுத் தன் நாட்டிற்குத் திரும்பி வந்தான். அப்போது திருஷ்டன் இறந்து போய் விட்டதையும் சிம்மாசனத்தின் மீது தன் தந்தையின் தம்பியின் மகனான வசுராதன் அமர்ந்து ஆட்சி புரிவதையும் கண்டான். பனந்தன் அவனிடம் போய் நாட்டில் பாதியைத் தனக்குக் கொடுக்கும்படிக் கேட்டான்.

வசுராதனோ ''உன் தந்தை ஒரு வைசியப் பெண்ணை மணந்து கொண்டதால் நாடாளும் உரிமையை இழந்து விட்டார். உன் தந்தைக்கே இல்லாத உரிமை உனக்கு ஏது? நான் ஒன்றும் கொடுக்க மாட்டேன்'' என்றான்.

பனந்தன் வசுராதனுடன் போர் புரிந்தான். அதில் அவன் வசுராதனைக் கொன்று முழு நாட்டையும் அடைந்தான். ஆனால் அதனைத் தானே ஆளாமல் தன் தந்தையான நாபாகனிடம் கொடுத்து ஆளச் சொன்னான்.

நாபாகனோ ''நான் நாட்டை ஆளத் தகுதி பெற்றவனல்ல. நீ பலத்தால் இந்நாட்டை வென்றாய். எனவே நீயேதான் ஆள உரிமை பெற்றவன்'' என்றான்.

இவ்விதமாக வைசியனான நாபாகனின் புதல்வன் பனந்தன் அரசனாகி ஆட்சி புரிந்து வரலானான்.





# உன் ஜாதகத்தைப் பார்

முள்ளூருக்கு ஒரு சன்னியாசி தன் சீடர்களோடு வந்து ஓரிடத்தில் முகாமிட்டார். ஊர்க்காரர்கள் சன்னியாசியிடம் போய் தம் எதிர் காலம் பற்றிக் கேட்பார்கள். அவர் முதலில் வந்தவனின் பெயரைக் கேட்டு விட்டு உள்ளே போய் அவனது கடந்த காலவாழ்க்கை, முன்னோர் ஆகியவற்றை எழுதி வந்து படிப்பார். அவை சரியாக இருக்கும். எனவே அவர் சொல்லும் எதிர்காலப் பலனும் அப்படியே நடக்கும் என நம்பிக்கை கொண்டு கூட்டம் கூட்டமாக வந்து பலன் கேட்கலாயினர்.

இதையெல்லாம் பார்த்த முத்தப்பா என்ற இளைஞனுக்கு ஏனோ அந்த சன்னியாசியின் பேரில் நம்பிக்கை ஏற்படவில்லை. அவர் ஒருவனைப் பற்றிக் கூறும் கடந்தகால சம்பவங்கள் எல்லாம் சரியாக இருக்கின்றன. ஆனால் எதிர்காலப் பலனோ? அது பற்றி யாரும் பேசவே இல்லை. மேலும் அவர் வந்தவனின் பெயரைக் கேட்டு எழுதிக் கொண்டு ஒரு அறைக்குள் போவதும் பிறகு காகிதத்தில் எழுதி வந்து படித்துக் கொடுப்பதும் அவனுக்குப் புரியாத புதிராகவே இருந்தது.

அவன் அவரது சீடர்களை விசாரித்தான். சீடனோ ''சுவாமிகள் சமாதி நிலைக்குப் போய் ஒருவரைப் பற்றிய விவரங்களை ஞான திருஷ்டியில் அறிந்து எழுதிக் கொடுப்பார்'' என்றான்.

முத்தப்பாவிற்கு ஒரு சந்தேகம். முற்றும் துறந்த இந்த முனிவர் ஏன் மக்களிடம் பணம் வசூலிக்க வேண்டும்? இலவசமாகவே எல்லோருக்கும் பலன் சொல்லக் கூடாதா? இருக்கட்டும் இவரு

பாபநாசம் சாமா



டைய எதிர்கால பலனை நான் பலர் முன் சொல்கிறேன் எனத் தீர்மானித்துக் கொண்டான்.

ஒரு நாள் முத்தப்பா அந்த சன்னியாசி தங்கி இருந்த இடத்திற்குப் போனான். அப்போது சன்னியாசி தம் சீடர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அதை முத்தப்பா மறைந்திருந்து கவனமாகக் கேட்கலானான்.

சன்னியாசி தம் சீடர்களிடம் ''இந்த ஊரில் அநேகமாக எல்லோருக்கும் ஜாதகபலன் கூறியாகி விட்டது இனி அடுத்த ஊருக்கு நாம் போக வேண்டியதுதான். அதற்கு முன் நீங்கள் இருவரும் மாறு வேடத்தில் தினமும் அங்கு போய் அவ்வூரிலுள்ள ஒவ்வொருவரின் குலம், கோத்திரம் முன்னோர்கள், கடந்தகால வாழ்க்கை ஆகியவற்றை முன்பு இந்த ஊரில் செய்தது போலச் சேகரித்து வாருங்கள். அந்த ஊருக்காக ஒரு புத்தகம் தனியாகப் போட்டு எழுதலாம்'' என்றான். சீடர்களும் அவ்வாறே செய்வதாகக் கூறிப் போய்ப் படுத்தார்கள்.

அப்போது முத்தப்பா ''ஓ! இப்படியா செய்கிறீர்கள்! சீடர்கள் முன்னதாக ஒரு ஊருக்குப் போய் அவ்வூரில் உள்ளவர்களைப் பற்றிய முழு விவரங்களைச் சேகரித்து வருகிறார்கள். அதை சன்னியாசி ஒரு குறிப்பு எட்டில் எழுதி வைத்துக் கொண்டு பிறகு அந்த ஊருக்குப் போகிறார். ஜாதகபலன் கேட்க வந்தவன் பெயரைக் கேட்டுக் கொண்டு உள்ளே போய் தான் முன்பே எழுதி வைத்திருக்கும் குறிப்புகளைப் பார்த்து எழுதிக் கொடுப்பார். கடந்தகால வாழ்க்கையைப் பற்றி அது அந்த பலன் கேட்க வந்தவனுக்கு முற்றிலும் சரியானதாக இருக்கும். எனவே சன்னியாசி கூறும் எதிர்காலப் பலனும் சரியாக இருக்கும் என நம்பி விடுகிறான். யாரும் சன்னியாசி கூறியது சரி இல்லை என்று தைரியமாகச் சொன்னதே இல்லை. இதைப் பயன்படுத்திக்

கொண்டா இவர் மக்களிடமிருந்து பணம் பறிக்கிறார்! இதற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கிறேன்'' என எண்ணிக் கொண்டு அப் போதே சன்னியாசியின் அறைக் குள் போனான். அங்கே ரகசிய மாக மறைத்து வைக்கப்பட்டி ருந்த அவ்வூர் வாசிகளைப் பற்றிய குறிப்புப் புத்தகத்தையும், ஒட்டு தாடி மீசைகளையும் எடுத்துக் கொண்டு வந்தபடியே போய் விட் டான். எல்லோரும் நன்கு தூங் கிக் கொண்டிருந்ததால் முத் தப்பா வந்து போனது யாருக் குமே தெரியவில்லை.

மறு நாள் முத்தப்பா ஒரு சில வாலிபர்களை அழைத்துக் கொண்டு சன்னியாசியைக் காணச் சென்றான். அவன் தன் ஜாதக பலன் கூறும்படிக் கேட்டான். அவரும் அவன் பெயரை எழுதிக் கொண்டார். அவனோடு வந்தவர் களும் தமக்கும் ஜாதகபலன்களைக் கூறும்படிக் கேட்கவே சன்னியாசி அவர்களது பெயர்களையும் எழுதிக் கொண்டார். பிறகு எழுந்து தம் அறைக்குள் சென்றார். அவரோடு அவரது சீடர் ஒருவனும் சென்றான்.

சற்று நேரமாகியது அப்போது. சீடன் மட்டும் வெளியே வந்து ''சுவாமிகளுக்கு ரொம்ப அசதி யாக இருக்கிறது. உங்களுக்கெல் லாம் நாளை பலன்களைச் சொல் வார்'' என்றான். முத்தப்பாவோ ''அதெல்லாம் முடியாது. அவர் எனக்கு இன்றே பலன்களைச்



சொல்லியாக வேண்டும்'' எனக் கூறியவாறே எழுந்து சன்னியாசியின் அறைக்குள் ஓடினுன். அவனேடு வந்தவர்களும் 'திபு' 'திபு' வென்று அந்த அறைக்குள் நுழைந்து விட்டார்கள்.

திடீரென ஒரு கூட்டம் தன் அறைக்குள் வந்தது கண்டு அந்த சன்னியாசி வெலவெலத்துப் போனுர். பிறகு சமாளித்துக் கொண்டு அவர் '' இன்று எனக்கு ஒரே அசதியாக இருக்கிறது. நாளைக்கு உங்களுக்கு ஜாதக பலன்கள் கூறுகிறேன்" என்ருர் சற்றுத் தாழ்ந்த குரலில்.

முத்தப்பாவோ "எனக்கு என் ஜாதக பலனை அறிய அவ்வளவு ஆசை இல்லை. ஆனுல் இவர்கள் நீங்கள் சொல்லப்போகும் பலனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். உங்களுக்குப் பதிலாக நான் இவர்களுக்கு நீங்கள் சொல்லப் போவதைத் சொல்லி விடுகிறேன்" எனக் கூறி முன்தினம் இரவில் அந்த சன்னியாசியின் அறையிலிருந்து எடுத்துச் சென்ற குறிப்புப் புத்தகத்தை எடுத்தான்.

அதைக் கண்டதும் சன்னியாசியின் கை கால்கள் ஆட்டம் கண்டன. சீடன் தப்பி ஓட வழி இருக்கிறதா எனப்பார்க்கலானுன். ஆனுல் இருவரையும் அங்கு வந்தவர்கள் பிடித்து நான்கு அடிகள் கொடுத்து "இந்த ஊரையே ஏமாற்றியா வருகிறீர்கள்! இப்போதே ஓடிப் போங்கள். இந்த வட்டாரத்தில் உங்கள் தலை தெரியக் கூடாது. வேஷமா போடுகிறீர்கள்!" என்றனர்.

முத்தப்பா தான் முன்தினம் எடுத்த தாடி மீசைகளையும் விட்டெறிந்து அவர்கள் பல ஊர்களிலுள்ளவர்களை எப்படி ஏமாற்றிஞர்கள் என்பதை விளக்கினுன். ஊராரும் அவனைப் பாராட்டி அந்த சன்னியாசியையும் அவனது சீடர்களையும் ஊரை விட்டு அப்போதே விரட்டினுர்கள்.



# கண் வைத்தியம் செய்வதா ?

ஒரு ஊர் வியாபாரிக்கு அவலட்சணமான மகள் ஒருத்தி இருந்தாள். அவளுக்கு அவன் ஏற்ற வரனைத் தேடிப் பார்த்தான். ஆனால் எந்த வாலிபனும் அவ்வளவு அவலட்சணமான பெண்ணை மணக்க முன் வரவில்லை. முடிவில் அவன் அவளை ஒரு ஏழைக் குருட்டு வாலிபனுக்குக் கல்யாணம் செய்து வைத்தான்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அவ்வூருக்குப் பிரபலக் கண் வைத்தியர் ஒருவர் வந்தார். அவர் குருடர்களின் கண்களுக்குச் சிகித்சை அளித்துப் பார்வை அளிக்கிறார் என்பதை ஒரு சிலர் வியாபாரியிடம் கூறி ''உன் மாப்பிள்ளையையும் அவரிடம் காட்டுவது தானே. அவனுக்குப் பார்வை கிடைக்கும்'' என்றனர்.

வியாபாரியோ ''வேண்டாம். இப்போது அவர்கள் சந்தோஷமாக வாழ்க்கை நடத்துகிறார்கள். என் மாப்பிள்ளைக்குப் பார்வை கிடைத்து விட்டால் என் மகள் அவலட்சணமானவள் எனக் கண்டு மனம் மாறி விடுவானே!'' என்றான்.





# அவரே சிறந்தவர்!

மைதிலியின் மன்னன் மானவர்மனின் ஒரே மகள் மதாலசா. மன்னன் அவளைத் தன் மகனைப் போல வளர்த்துப் போர்க்கலைகளிலும் நல்ல பயிற்சியை அளித்தான். அவளும் ஒரு ஆண் மகனைப் போல வில்வித்தையிலும் வாட்போரிலும் மற்போரிலும் நல்ல பயிற்சி பெற்றாள். அவளது தேர்ச்சியைக் கண்டு அவளுக்கு ஏற்ற அரசகுமாரனைத் தேர்ந்தெடுத்து மணம் செய்து வைப்பது எனத் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் மதாலசாவிற்குச் சுயம்வரம் நடத்தப் போவதாக அறிவித்து ''என் மகளோடு சண்டையிட்டு அவளை யார் தோற்கடிக்கிறானோ அவனுக்கே என் மகள் மாலையிடுவாள்'' என அறிவித்தான். அந்த அறிவிப்பைக் கேட்டு பல அரசகுமாரர்களோடு இரண்டு காட்டு வேடர்களும் வந்து சேர்ந்தார்கள்.

வேடர்கள் இருவர் சுயம்வரத்திற்கு வந்துள்ளது கண்டு மானவர்மன் திகைத்துப் போனான் ஆனால் தனது தவறு அரசகுமாரர்கள் மட்டுமே வரலாம் என அறிவிக்காமல் போனதே என அவன் உணர்ந்தான். எனவே போட்டியில் எல்லோரையும் கலந்து கொள்ள அவன் அனுமதித்தான்.

மதாலசா எல்லா அரசகுமாரர்களையும் வாட்போரிலும் அம்பு எய்வதிலும் மற்போரிலும் தோற்கடித்தாள். முடிவில் அவள் போட்டியிட பொம்மன், திம்மன் என்ற இரு காட்டு வேடர்களே இருந்தார்கள். மதாலசா முதலில் பொம்மனுடன் போரிட்டாள். அதில் அவள் தோற்று விட்டாள். மானவர்மன் என்ன செய்வான்

சுதா சுவாமிநாதன்

பாவம்? காட்டு வேடனுக்கா தன் மகளைக் கல்யாணம் செய்து வைப்பது? வெகு நேரம் யோசித்த பின் அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. இன்னமும் திம்மன் அரசகுமாரியுடன் போர் புரியவில்லை. அதனால் திம்மனையும் பொம்மனையும் சண்டை போட வைத்து அதில் வெற்றி பெறுபவனுக்கே மதாலசா எனக் கூறலாம். இதில் பொம்மன் தோற்று திம்மன் வென்றால் மிகவும் நல்லது. பொம்மனுக்கு மதாலசா இல்லை என்றாகிவிடும். திம்மனிடம் அவன் மதாலசாவைத் தோற்கடிக்கவில்லை எனக் கூறி அனுப்பி விடலாம். இவ்வாறு எண்ணி பொம்மனை அழைத்து ''நீ திம்மனோடு சண்டையிட்டு வென்றால் தான் மதாலசாவை உனக்குக் கல்யாணம் செய்து வைப்பேன்'' என்றான்.

அப்போது பொம்மன் ''நான் ஏன் திம்மனோடு சண்டையிட வேண்டும்? நீங்கள் அறிவித்தபடி நான் மதாலசாவைத்தான் தோற்கடிக்க வேண்டும் என்பதே நிபந்தனை. அதன்படி நான் மதாலசாவுடன் போர் புரிந்து அவளைத் தோற்கடித்தாகி விட்டது. அவள் என்னிடம் தோற்று விட்டாள். எனவே நான் வேறு யாரையும் தோற்கடிக்கத் தேவை இல்லை.



எனவே மதாலசாவை எனக்கு மணமுடித்துக் கொடுங்கள்'' என்றான்.

மானவர்மனும் ''சுயம்வரப் போட்டி இன்னும் முடியவில்லை. மதாலசா திம்மனோடு சண்டையிட்டு அவனை வெல்லட்டும். அப்போது தான் அவளை உனக்கு மணம் செய்து வைக்க முடியும்'' எனக் கூறி மதாலசாவை திம்மனோடு சண்டையிடச் சொன்னான் மதாலசாவும் அவ்விதமே செய்து திம்மனிடமும் தோற்றுப் போனாள்.

அப்போது மன்னன் ''இப்போட்டியில் நீங்கள் இருவர் மதாலசாவை வென்றிருக்கிறீர்

கள். யாராவது ஒருவருக்குத்தான் நான் என் மகளை விவாகம் செய்து வைக்க முடியும். எனவே நாளை காலை தர்பார் மண்டபத்திற்கு இருவரும் வாருங்கள். மதாலசா யாரை விரும்பி அவன் கழுத்தில் மாலை போடுகிறளோ அவனையே என் மாப்பிள்ளையாக்கிக் கொள் கிறேன்'' என்ருன்.

அன்று மாலையே பொம்மன் மானவர்மனை அவனது அந்தரங்க அறையில் சந்தித்தான். அப்போது மதாலசாவும் அங்கே இருப்பது கண்டு அவன் அவள் காதில் விழும்படியாக மானவர்மனிடம் ''நான் கேகயநாட்டு இளவரசன். வேண்டுமென்றே வேடனுக வேடம் பூண்டு போட்டியில் கலந்து கொண்டேன். ஏனெனில் கேகயநாட்டு இளவரசன் போட்டியில் தோற்ருன் என்ருல் எனக்கும் என் வம்சத்தவருக்கும் அவமானம் தானே. திம்மனே உண்மையில் வேடன். எனவே ஒரு அரசகுமாரி ஒரு அரசகுமாரனை மணப்பதே முறை. உங்கள் மகளை நாளை என் கழுத்தில் மாலையிட்டுத் தேர்ந்தெடுக்கச் சொல்லுங்கள்'' என்ருன்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த மதாலசா எழுந்து வந்து ''அப்பா, தான் இன்னுனெனத் தெரிவிக்க பயந்தும் மாறு வேடம் பூண்டு தன் குலம் வம்சம் ஆகியவை பற்றிப் பெருமைப்படாத இந்த கேகய நாட்டு இளவரசனை நான் மணக்கத் தயாராக இல்லை. திம்மன் வேடர் குலத்தவனுன போதிலும் உண்மை தவருதவர். நேர்மையானவர். எனவே அவரை மணக்கிறேன். இவர் விரும்பினுல் என் கல்யாணத்தைப் பார்த்து விட்டு விருந்து சாப்பிட்டு விட்டுப் போகட்டும்'' என்ருள்.

மறு நாள் காலையில் மதாலசா திம்மனையே தேர்ந்தெடுத்ததாக எல்லோர் முன்னிலையிலும் கூறி அவனை மணந்து கொண்டாள்.



# இதுவா உன் திறமை!

ஒரு அரசன் தன்னிடம் வேலை கேட்க வந்த ஒரு வைத்தியனிடம் ''நீ வேறொரு வைத்தியனிடம் நற்சான்றிதழ் வாங்கிவா. உன்னை வைத்தியனாக நியமிக்கிறேன்'' என்றான். அவனும் ஒரு பெயர் பெற்ற வைத்தியரிடம் போய் தனக்கு ஒரு சான்றிதழ் கொடுக்குமாறு வேண்டினான்.

அவரோ ''உன்னை எனக்குத் தெரியாதே'' எனவே அவனும் ''எனக்கு உதவக் கூடாதா?'' என வேண்டினான். அந்த வைத்தியரும் ''கோபாலன் என்பவன் என்னிடம் பல வருடங்கள் இருந்து வைத்தியம் கற்றுக் கொண்டான்'' என எழுதிக் கொடுத்தார்.

அரசனும் அந்தச் சான்றிதழைப் படித்து விட்டு ''எல்லோரும் இரண்டு மூன்று வருடங்கள் கற்று வைத்தியர்களாகிறார்கள். நீயோ பல வருடங்கள் இருந்து கற்றாய். உன் மூளை மிகவும் மந்தமானது. எனவே உனக்கு வேலை இல்லை'' எனக் கூறி அனுப்பி விட்டான்.






# உண்மை அறிந்து சொல்!

சூப்பைய்யனுக்கு எந்த செய்தியையும் தானே முதலில் தன் ஊரில் சொல்லவேண்டும் என்ற எண்ணம். அதனுல் அவன் தான் கேட்டது உண்மையா பொய்யா என்று கூடத் தெரிந்து கொள்ளாமல் முதலில் போய் ஊராரிடம் சொல்வான். அவன் அறிந்த தகவல் அநேகமாக யாரிடமிருந்து கேட்டதாக இருக்குமே ஒழிய அவனே நேரில் கண்டதாகவோ அல்லது நேரில் கேட்டதாகவோ இராது. அதனுல் அது கட்டுக் கதையாக இருக்கும். அநேகமாகச் சரியாக இராது. எனவே ஊரார் அவன் சொல்வதை நம்ப மறுத்து வந்தார்கள்.

ஒரு முறை அவ்வூரில் இரண்டு கட்சிகளுக்கிடையே தகராறு ஏற்பட்டது. இவ்வாறு தகராறு ஏற்பட்ட போதெல்லாம் அடுத்த ஊர் கர்ணம் கந்தசாமிதான் வந்து ஒரு சுமுகமான தீர்ப்பைக் கூறி சமாதானம் செய்து வைப்பார். இருகட்சிகள் அவரது தீர்ப்பை ஏற்று வந்தனர். அம்முறையும் அவர்கள் கந்தசாமிக்குத் தகவல் அனுப்பி அவரை வருமாறு வேண்டிக் கொண்டார்கள். கந்தசாமியும் மறு நாள் காலே வருவதாகச் சொல்லி அனுப்பினுர். இருகட்சியினரும் "சரி. இன்றைக்குக் கர்ணம்கந்தசாமி வரவில்லே. அதனுல் வீண் தகராறு செய்து கொண்டிருக்க வேண்டாம். அவர் வரும் வரையில் சண்டை சச்சரவு வேண்டாம். அவர் வந்து தீர்ப்பு கூறட்டும். அதனே நாம் ஏற்போம்'' என்று கூறியவாறே அப்போதைக்குப் பிரிந்து தம் வீடுகளுக்குச் சென்றனர். மறு நாள் காலே வெகு நேரமாகியும் கர்ணம்

பாபநாசம் சாமா

கந்தசாமி வந்து சேரவில்லே. அவர் எப்போதும் ஒரு குறித்த நேரத்தில் வருவதாகச் சொன்னுல் சொன்ன சொல் தவருமல் வந்து விடுவார். ஆனுல் அவர் வராத தால் எல்லோரும் என்ன நடந் ததோ என எண்ணி அவர் வந்த பிறகு பேசலாம் எனக் கலேந்து சென்ருர்கள்.

சுப்பையயன் சும்மா இருப் பானு என்ன? கந்தசாமி வராத தற்கு என்ன காரணம் என்று அறிந்து வந்து ஊரில் முதலில் தானே சொல்ல வேண்டும் என எண்ணி வெயிலேயும் பசியையும் பொருட்படுத்தாமல் அடுத்த ஊருக்கு ஓடிஞன்.




அவன் அடுத்த ஊரின் எல்லேயை அடைந்த போது ஒரு சிலர் ஒரு பிணத்தை மயானத்திற்கு எடுத் துச் சென்று கொண்டிருந்தனர். சுப்பையயன் கூட்டத்திலிருந்து சற்று ஒதுங்கி நடந்து வந்து கொண்டிருந்த ஒருவனிடம் ''இறந்தது யார்?'' என்று கேட் டான். அவனும் ''எங்கள் ஊர் பிரமுகர்'' என்ருன். உடனே சுப்பைய்யன் ''உங்கள் ஊர்ப் பிர முகர் யாரோ?" என்று கேட்டான். அவனும் ''எங்கள் ஊரிலேயே பெரிய பிரமுகர் கர்ணம்கந்தசாமி தான்'' என்ருன். அது கேட்டு உடனே சுப்பைய்யன் தன் ஊருக் குத் திரும்பி வந்தான். அவன் தன் ஊராரிடம் அடுத்த ஊர் கர்ணம்கந்தசாமி அன்று காலே இறந்து விட்டார் எனக் கூற லாஞன். ஆனுல் அவன் கூறியதை யாருமே நம்பவில்லே. அதைக் கண்ட சுப்பைய்யன் ''இருங்கள். நான் போய் அந்த ஊர்க்காரன் ஒருவனேயே அழைத்து வந்து நான் சொல்வது உண்மை என நிரூபிக் கிறேன்'' எனக் கூறி விட்டு அடுத்த ஊரை நோக்கி ஓடிஞன்.

அப்போது அவ்வூர் எல்லேயில் அவன் ஒரு பெரிய மனிதரை பார்த்தான். அவர் யாரென்று அவனுக்குத் தெரியாது. ஆனுல் அவர் தாம் கர்ணம்கந்தசாமி.

அவரை சுப்பைய்யன் முன்பின் பார்த்ததும் இல்லை. எனவே அவரிடமே அவன் போய் ''ஐயா, இன்று காலை இந்த ஊர் கர்ணம் கந்தசாமி இறந்து விட்டார் என்று கூறினால் நீங்கள் நம்புவீர்களா?'' என்று கேட்டான்.

அவரும் தலையை ஆட்டி ''நம்ப மாட்டேன். ஏனென்றால் நான் தான் இந்த ஊர்க் கர்ணம் கந்த சாமி'' என்றார். அது கேட்டு சுப் பைய்யன் திகைத்துப் போய்த் தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். அவனிடம் கந்தசாமி விசாரித்துப் பார்த்து ''ஓகோ. நீ இந்தத் தகவலை எங்கள் ஊர் வெட்டிப் பயல் வெங்கப்பனிட மிருந்து தெரிந்து கொண்டிருக் கிறாய். அவன் பொய்யை உண்மை போலக் கூறுவதில் கைதேர்ந்த வன். நீயே பார். அவனிடம் நீ, ''இறந்தது யார்?'' என்று கேட்க அவன் 'ஒரு பிரமுகர்' என்றான். நீ ஊரில் பிரமுகர் யார், என்று கேட்க அவன் பெரிய பிரமுகர் கர்ணம்' என்றான். எனவே நீ இரண்டையும் சம்மந்தப் படுத்தி நான் இறந்ததாக நினைத்து விட் டாய். ஆனால் இறந்தது இவ்வூர் பிரமுகர் பஞ்சாட்சரம். அவன் இப்படி இரு பொருள் படப்பேசி உன்னை நம்ப வைத்திருக்கிறான். இன்று காலை திடீரென அவர் இறந்ததால் தான் நான் உங் கள் ஊருக்கு வரமுடியவில்லை. இப்போது உங்கள் ஊருக்குத் தான் போகிறேன்'' என்று கூறி அவனையும் அழைத்துக் கொண்டு அவனது ஊருக்குப் போனார்.

ஊரார் சுப்பைய்யன் கர்ணம் கந்தசாமியோடு வருவது கண்டு 'ஓஹோ' என்று கேலியாக அவனைப் பார்த்துச் சிரித்தார்கள். அது முதல் எந்த விஷயத்தையும் சுப்பைய்யன் தீர விசாரித்து அது உண்மை என அறிந்து கொண்டே பிறரிடம் கூறலானான்.






கம்சன் வசுதேவரையும் தேவகியையும் சிறையில் அடைத்துப் பலமான காவலும் போட்டான். தேவகியின் கர்ப்பத்தில் இருந்து விஷ்ணு பத்து மாதகாலத்தைக் கழித்துவிட்டார். ஆவணி மாதம் அஷ்டமிதிதியில் ரோகிணி நட்சத்திரத்தன்று தான் கிருஷ்ணர் பிறந்தார். கம்சன் காவலாளிகளிடம் வெகு ஜாக்கிரதையாகக் காவல் புரியும்படிக் கூறி விட்டுத் தான் போயிருந்தான். காவலாளிகளும் கண் விழித்துக் கொண்டிருந்தனர். ஆனால் கிருஷ்ணர் பிறந்த போது மாயாதேவி வசுதேவரையும் தேவகியையும் தவிர மற்றவர்களையெல்லாம் அயர்ந்து தூங்க வைத்ததாள்.

கிருஷ்ணர் பிறந்ததும் அதன் அழகையும் பொலிவையும் கண்ட தேவகி ''இதனை எப்படியாவது காப்பாற்றுங்கள்'' என வசுதேவரிடம் வேண்டினாள். வசுதேவருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. அப்போது ஒரு அசரீரி வாக்கு ''வசுதேவரே. இக் குழந்தையை நீ கோகுலத்திற்கு எடுத்துப் போய் நந்தகோபனின் வீட்டில் வைத்து விட்டு அங்கு யசோதைக்குப் பிறந்துள்ள பெண் குழந்தையை எடுத்து வா. உனக்கு யமுனைநதி வழி விடும்'' என்றது.

வசுதேவர் குழந்தையை எடுத்துக் கொண்டார். சிறைக் கதவு தானே திறந்து கொண்டது. காவலாளிகளும் மற்றவர்களும் நன்கு



தூங்கிக் கொண்டிருந்தார்கள். வசுதேவர் குழந்தையுடன் சென்று யமுனைநதியில் இறங்க நதியின் நீர் அவருக்குச் செல்ல வழிவிட்டது.

வசுதேவர் நந்தகோபனின் வீட்டிற்குச் சென்றார். அங்கும் யாவரும் மெய் மறந்து தூங்கிக் கொண்டிருந்தனர். வசுதேவர் தாம் கொண்டு வந்த குழந்தையை யசோதையினருகே படுக்க வைத்து விட்டு அங்கு பெண்ணாகப் பிறந்த யோகமாயையை எடுத்துக் கொண்டு மதுராபுரிக்குத் திரும்பி சிறைச் சாலைக்குள் சென்றார். உடனே சிறைக் கதவு மூடிக் கொண்டது. சற்று நேரத்திற்கெல்லாம் வசுதேவர் கோகுலத்திலிருந்து கொண்டு வந்த குழந்தை 'குவா' 'குவா' என்று கத்தியது. அப்போது தான் காவலாளிகளின் தூக்கம் கலைந்தது. தேவகியின் அறையில் குழந்தை அழும் சத்தம் கேட்டு சிறைக் காவலாளிகள் கம்சனிடம் ஓடி தேவகிக்குக் குழந்தை பிறந்ததைக் கூறினார்கள்.

கம்சன் வேகவேகமாக வசுதேவர் அடைக்கப்பட்டிருந்த சிறைக்கு ஓடோடி வந்தான். அவன் வசுதேவரிடம் ''இது தானே எட்டாவது குழந்தை? விஷ்ணு தானே இப்படி பிறந்திருக்கிறான்? என்னைக் கொல்ல வா வந்திருக்கிறான்? கொடு குழந்தையை இப்படி'' என்றான். வசுதேவரும் குழந்தையை எடுத்துக் கம்சனிடம் கொடுத்தார்.

கம்சன் அதனைப் பார்த்துத் தன் மனதிற்குள்ளேயே ''இதென்ன மாயம்? இது பெண் குழந்தையாக அல்லவா இருக்கிறது! ஒரு வேளை விஷ்ணு தன் மாயையால் என் கண்களுக்கு இதனைப் பெண் குழந்தையாகக் காட்டி ஏமாற்றுகிறானோ? நான் எவ்வளவு பலத்த காவல் போட்டேன்! குழந்தை பிறந்ததுமே ஓடியும் வந்தேன். அதனால் இதில் எவ்வித மாற்றத்திற்கும் இடமே இல்லை. உம் இதை எடுத்துப் போய்க் கொல்

கிறேன்'' என எண்ணி அதன் கால்களைப் பிடித்துத் தரை மீது அடிக்கக் கையை உயர்த்தினுன்.

அப்போது அவன் கையிலிருந்து தப்பிய அக்குழந்தை ஆகாயத்தில் போய் தேவதை வடிவம் எடுத்து ''கம்சா. என்னைக் கொன்று என்ன பயன்? உன்னைக் கொல்லப் போகிறவன் பிறந்து விட்டான். அவன் வளர்ந்து பெரியவனுகி உன்னைக் கொல்லத்தான் போகிருன்'' எனக் கூறி விட்டு மறைந்தது.

கம்சனுக்கு ஒன்றுமே புரிய வில்லை. அவனைக் கொல்பவன் பிறந்து விட்டானு? அப்படி யானுல் அவன் இன்னும் குழந்தை யாகத்தான் இருக்கவேண்டும். எனவே ஒருவயதிற்குட்பட்ட குழந்தைகளை எல்லாம் கொன்று விடுவது என அவன் தீர்மானித்து பூதனை என்னும் அரக்கியையும் தேனுகன், வத்சகன், பிரலம்பன், பகன் ஆகிய அரக்கர்களையும் அனுப்பினுன்.

நந்தகோபன் தனக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பது கண்டு ஒரு விழாவே கொண்டாடினுன். இதைக் கேள்விப் பட்ட பூதனை கோகுலத்திற்குச் சென்ருள். அவள் நந்தகோபனின் வீட்டில் குழந்தையாக இருக்கும் கிருஷ்ணரைக் கொல்ல முயன்ருள்.



ஆனுல் அவளைக் கிருஷ்ணர் கொன்ருர். இது போல அவர் வளர வளர அவரைக் கொல்ல வந்த தேனுகன், வத்சகன், பகன், ஆகிய ராட்ரஸர்களையும் கொன்ருர்.

கிருஷ்ணர் பசுக்களைக் காக்க மலையையே குடையாகப் பிடித்தார். கேசி என்ற அரக்கன் கிருஷ்ணரைக் கொல்ல முயன்று அவனும் இறந்தான். இப்படியாகக் கிருஷ்ணர் தம்மைக் கொல்ல வந்த ராட்சஸர்களை எல்லாம் கொன்று விட்டார் என்று கேட்டு கம்சன் திகைத்துப் போனுன்.

இனி கிருஷ்ணரை ஏதாவது ஒரு உபாயம் செய்தே கொல்ல வேண்டும் எனக் கம்சன் தீர்மானித்துக்



கொண்டான். அவன்தான் தனுர் யாகம் செய்யப் போவதாக அறிவித்து, அதற்குக் கிருஷ்ணரையும் பலராமனையும் அழைத்திருந்தான். அவர்களை ரதத்தில் அக்ரூரர் அழைத்து வந்தார்.

கிருஷ்ணர் தனுர் யாகத்தின் போது வில்லை முறித்தார். தன்னை எதிர்க்க வந்த அரசர்களைத் தோற்கடித்து புறமுதுகு காட்டி ஓடச் செய்தார். தன்னைக் கொல்ல கம்சனை ஏவிய யானையைக் கொன்றார். சாரணன், முஷ்டிகன் ஆகியவர்களுடன் போர் புரிந்து அவர்களைக் கொன்றார்.

கம்சனை சிம்மாசனத்திலிருந்து இழுத்துத் தள்ளி அவனையும் கிருஷ்ணர் கொன்றார். பின்னர் அவர் வசுதேவரையும் தேவகியையும் சிறையிலிருந்து விடுதலை செய்தார். உக்கிரசேனனை மீண்டும் மன்னனாக்கினார்.

வசுதேவர் கிருஷ்ணருக்கும் பலராமனுக்கும் பூணூல் போட்டு சாந்தீபர் என்ற ஆசிரியரிடம் கல்வி பயில அனுப்பினார். அவர்களும் குருகுலவாசம் செய்து பனிரெண்டு வயதிற்குள் கற்க வேண்டியதைக் கற்றுக் கொண்டார்கள்.

தனது மாப்பிள்ளையான கம்சன் கொல்லப்பட்டது கேட்டுக் கோபம் கொண்டு ஜராசந்தன் மதுராபுரியின் மீது படை எடுத்து வந்தான். பயங்கரப் போர் நடக்க அதில் அவன் தோற்று ஓடினான். இப்படியாக ஏழு முறை ஜராசந்தன் படை எடுத்துப் பார்த்தான். கடைசியில் மிலேச்ச மன்னனை காலயுவனின் உதவியோடு மதுராபுரி மீது படை எடுத்து வந்தான்.

அப்போது கிருஷ்ணர் யாதவர்களை எல்லாம் கூட்டி ''இப்போது ஜராசந்தன் மிலேச்ச மன்னன் காலயுவனின் உதவியோடு வந்திருக்கிறான். இந்தப் படையோடு போர் புரிவது சிரமமே, நம் உயிரைக் காத்துக் கொள்ள வீடு வாசல் சொத்து சுகங்களை எல்லாம் விட்டு வீட்டு இங்கிருந்து நாம் சென்று விடுவதில் தவறு

எதுவும் இல்லை. நம் இருப்பிடத்திற்கே ஆபத்து வந்தால் காடுகளுக்கும் மலைகளுக்கும் செல்வதே நல்லது எனப் பெரியவர்களும் கூறியுள்ளார்கள். விஷ்ணுவே எதிரிகள் எளிதில் வர முடியாத இடமான பாற் கடலில் பாம்பணையில் இருக்கவில்லையா? பரமசிவன் கைலயங்கிரியில் வசிக்கவில்லையா? எனவே நாமும் மதுராபுரியை விட்டுப் போய் துவாரகாபுரியில் குடி புகுந்து விடலாம். அது ரைவத மலைக்கருகே கடல் ஓரமாக உள்ளது அழகிழ இடம்'' என்றார்.

யாதவர்களும் அதற்குச் சம்மதித்துக் குடும்பத்தவருடன் கிளம்பிப் போய் துவாரகையை அடைந்தார்கள். பலராமனும் கிருஷ்ணனும் அவர்களுக்கு அங்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து விட்டு ஜனங்களே இல்லாத மதுராபுரிக்குத் திரும்பி வந்தார்கள். அப்போதுதான் காலயுவன் வந்து மதுராபுரியை முற்றுகை இட்டான்.

கிருஷ்ணர் மதுராபுரியிலிருந்து ஓடலானார். அதைக் கண்ட காலயுவன் அவரைப் பின் தொடர்ந்து துரத்தலானான். கிருஷ்ணர் சட்டென வழியில் இருந்த முசுகுந்தர் என்ற முனிவரின் ஆசிரமத்தினுள் புகுந்து ஒளிந்து கொண்டு விட்டார். காலயுவன் கிருஷ்ணரை




அங்கு தேடும் போது தூங்கிக் கொண்டிருந்த முசுகுந்தரை மிதித்து விட்டான். தூக்கம் கலைந்து முனிவர் அவனைக் கோபத்தோடு பார்க்கவே அவன் எரிந்து சாம்பலானான்.

அதற்குப் பின் கிருஷ்ணரும் பலராமரும் துவாரகைக்குச் சென்றார்கள். அங்கு உக்கிரசேனனை மன்னனாக்கி சுகமாக இருந்து வரலானார்கள்.

ருக்மிணியை சிசுபாலனுக்கு அவளது விருப்பத்திற்கு மாறாகக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடுகள் நடந்தன. இது கண்டு கிருஷ்ணர் ருக்மிணியைக் கவர்ந்து வந்து ராட்சஸ முறைப்படி விவா



குழந்தையை ஒரு அரக்கன் கவர்ந்து சென்ருன் என்ருல் அது எனக்கு எவ்வளவு பெரிய அவமானம்! இது மாயாசக்தியின் துணை இல்லாமல் நடக்க முடியாது எனக்கு மகளைக் கொடுப்பது போலக் கொடுத்து விட்டு இப்படிப் பறித்துக் கொள்வது நியாயமா? என் குழந்தையை நீ திருப்பிக் கொண்டு வந்து கொடு. எல்லாம் உன் உதவியால் தான் அந்த ராட்சஸன் இந்த பலமான கோட்டைக்குள் வந்து இப்படிச் செய்திருக்கிருன்'' என்ருர்.

கிருஷ்ணர் முன் தேவியும் தோன்றி "ஒரு சாபத்தின் காரணமாகவே உன் குழந்தை அபகரிக்கப்பட்டு சம்பரன் என்ற ராட்சஸனிடம் வளர்ந்து வருகிருன். அவன் தனது பதினுருவது வயதில் சம்சரனைக் கொன்று விட்டு உன்னிடமே திரும்பி வந்து விடுவான். கவலைப்படாதே'' என்ருள். அப்போது கிருஷ்ணரும் ருக்மிணியும் கவலையை விட்டு மனம் தேறிஞர்கள்.

விஷ்ணுவின் அம்சமாகப் பிறந்த கிருஷ்ணருக்குத் தெரியாமல் சம்பரன் எப்படி பிரத்யும்னனைக் கவர்ந்து சென்ருன் என்ற சந்தேகம் ஏற்படுகிறதல்லவா? இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது. விஷ்ணு பகவாஞக இருக்கும்

கம் செய்து கொண்டு விட்டார். ஜாம்பவதி, மித்திரவிந்தை சத்தியபாமா, நாக்னஜீதி, பத்திரை, லக்ஷ்ணு, காளிந்தி ஆகியவர்களும் கிருஷ்ணரின் மனைவிகளே.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு ருக்மிணி பிரத்யும்னனைப் பெற்றெடுத்தாள். ஆனுல் குழந்தை பிறந்த பிறகு சம்பரன் என்ற அரக்கன் அவனைக் கவர்ந்து போய் அவனைத் தன் மகளான மாயவதியிடம் கொடுத்தான்.

கிருஷ்ணரோ இது கண்டு திகைத்து ஜகதம்பிகையை தியானித்து ''அம்பிகே! இதென்ன மாயம்? என் வீட்டிலிருந்து கட்டுக் காவல்களை எல்லாம் மீறி என்

போது அவருக்குக் எல்லாம் தெரியும். ஆனால் மானிடனாக அவதரித்த பின் மானிட இயல்புதானே அவரிடம் இருக்க வேண்டும்.? இராமர் விஷ்ணுவின் அவதாரமே ஆனாலும் நாட்டை இழந்து, மனைவியை இழந்து, அவள் எங்கே இருக்கிறாள் எனக் கூடத் தெரியாமல் அலையவில்லையா? அவரது மகன்களான லவனையும் குசனையும் கூட வால்மீகி முனிவர் இன்னார் எனச் சொன்ன பிறகு தானே தெரிந்து கொண்டார்! எனவே பகவான் மனிதராக அவதரித்து விட்டால் மனித இயல்புடன் இருந்தே ஆக வேண்டும். கம்சனுக்கு பயந்து கிருஷ்ணர் கோகுலத்திலும் ஜராசந்தனுக்கு பயந்து துவாரகையிலும் வாழவில்லையா?

சாதாரண மனிதர்கள் புரியும் பல தவறுகளையும் கிருஷ்ணர் செய்திருக்கிறார் அல்லவா? மனைவி சத்தியபாமா கேட்டதற்காக பாரிஜாத மரத்தை தேவலோகத்திலிருந்து கொண்டு வந்தாரே. அதற்காக இந்திரனோடு போர் புரிய வேண்டியதயிற்று. ஜாம்பவதி தனக்குப் பிள்ளை பிறக்க வேண்டுமென விரும்பிய போது உபமன்யுவின் ஆசிரமத்திற்கு அவர் போய்த் தவம் செய்தாரே. அவர் தவத்திற்கு மகிழ்ந்து சிவன் பார்வதிசமேதராகக் காட்சி அளித்து ''கிருஷ்ணா. உனக்குப் பதினாறாயிரம் மனைவிகள் இருப்பார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் பத்துக் குழந்தைகள் வீதம் பிறக்கும். நீயும் வெகு காலம் உயிர் வாழ்வாய்'' என வரம் கொடுத்து ஆசி கூறி மறைந்தார்.

கிருஷ்ணரும் உபமன்யுமுனிவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு துவாரகைக்குத் திரும்பினார். மகாதேவியைத் தவிர மற்றவர்கள் எல்லாம் மாயையின் சக்திக்கு உட்பட்டவர்களே என்பது இதனால் விளங்குகிறதல்லவா!





# சீனத்துப்பட்டு

மூவாயிரம் வருடங்களுக்கு முன் சீனச் சக்கரவர்த்தி அழகிய பெண் ஒருத்தியை மணந்து கொண்டார். அவள் பெயர் சிலிங்கோஷி. அவள் வயது பதினாறு. அவளே பட்டத்து ராணி. அவளுக்கு எவ்விதக் குறையும் இல்லாது சக்கரவர்த்தி பார்த்துக் கொண்டார். அவள் எதைக் கேட்டாலும் உடனே அது கிடைத்து விடும்.

இவ்வளவு இருந்தும் சிலிங் எதற்காகவோ கவலைப் பட்டுக் கொண்டிருப்பதைச் சக்கரவர்த்தி கவனித்து விட்டார். அவள் துயரம் என்ன என அவரால் அறிய முடியவில்லை. அவளும் தன் மனதில் உள்ள கவலையைக் கூற வில்லை. எனவே அவர் தன் மந்திரிகளிடம் ''ராணி எதற்கோ கவலைப் படுகிறாள். அது என்ன என்று தெரியவில்லை. எனவே அதனை நாம் அறிந்து அவள் கவலையைப் போக்க வேண்டும்'' என்றான்.

அப்போது சிலிங்கும் அங்கு வந்தாள். அவள் மனம் தன் பெற்றோரை விட்டுப் பிரிந்ததால் தான் கவலை கொண்டிருந்தது. அதை அவள் கூற விரும்பவில்லை. ஆனால் கவலை தோய்ந்த அவளது முகத்தைக் கண்ட சக்கரவர்த்தி ''நீ ஏன் இப்படிக் கவலையுடன் இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

அவளும் ''எனக்கு ஒரு கவலையும் இல்லை. என் மனம் சற்று சலித்துப் போயிருக்கிறது. ஏதாவது பொழுது போக்கிற்கு இருந்தால் சரியாய்ப் போய்விடும்'' என்றாள். அப்போது சக்கரவர்த்தி தன் மந்திரிகளிடம் ''கேட்டீர்களா? ராணியின் மனதைச் சந்தோஷப் படுத்த ஏதாவது செய்யுங்கள்'' என்றான். மந்திரிகளும்

மஞ்சுளா கிருஷ்ணன்



ஏதாவது செய்வதாகச் சொல்லி விட்டுச் சென்றார்கள்.

இதற்குள் ராணியின் பணிப் பெண்கள் தேநீர் கொண்டு வந்து வைத்தார்கள். அவள் எப்போதும் கோப்பையில் தானே தேநீர் கலந்து சுற்றிலும் இருப்போர்க்குக் கொடுத்து விட்டுத் தானும் குடிப்பது வழக்கம். அது போல அன்று எல்லோருக்கும் கொடுத்து விட்டுத் தன் கோப்பைத் தேநீரைக் குடிக்காமல் அப்படியே வைத்து விட்டு ஏதோ யோசனையில் உட்கார்ந்து விட்டாள்.

அப்போது அவள் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்த மரத்தின் மீதிருந்து பட்டுப் பூச்சிக் கூடு ஒன்று கூடாக இருந்த தேநீரில் விழுந்து விட்டது. அது விழுந்த வேகத்தில் தேநீர் சிதறித் தெறித்து ராணியின் விலையுயர்ந்த ஆடைகளைப் பாழாக்கியது.

அப்போது ராணி ''கோப்பையில் என்ன விழுந்திருக்கிறது என்று பாருங்கள்'' என்று தன் பணிப் பெண்களிடம் கூறினாள். ஒருத்தி கோப்பைக்குள் விரல்களை விட்டு சிறிய நூல் கண்டு போன்ற பொருளை இடுக்கி எடுத்துக் காட்டினாள்.

ராணியும் அதனை வாங்கிப் பார்த்தாள். அது கம்பிளி மரத்தில் பட்டுப் பூச்சி வைக்கும் கூடு. அந்தக் கூடு உடைய அதிலிருந்து பட்டுப் புழு நெளிந்தவாறே வெளியே வந்து அவள் கையில் ஊர்ந்தது. கூட்டிலிருந்த மெல்லிய இழையை அவள் பார்த்து “ஆகா! எவ்வளவு வழவழப்பாயும் சன்னமாகவும் இது உள்ளது. இதைக் கொண்டு ஆடை நெய்தால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும்'' என எண்ணினாள்.

மறு நிமிடமே அவள் மனதில் ஒரு எண்ணம் தோன்றியது. அந்த மாதிரிப் பட்டுப் புழுவின் கூடுகளைச் சேர்த்து நூலைச் சேகரித்துக் குழல்களில் சுற்றி பாவு போட்டு தறியில் கட்டி துணியாக நெய்து பார்க்கலாம் என்பதுவே அது.

எனவே உடனே அவள் அந்த வேலையில் உற்சாகத்தோடு செயல்பட முனைந்தாள்.

பட்டுப் புழுவின் கூட்டை வெந் நீரில் போட்டு புழுவை அப்புறப் படுத்தி குழல்களில் சுற்றவும் தறி போடவும் தச்சன் தேவை. எனவே உடனே தச்சனை வரவழைத்தாள். தன் அறையில் ரகசியமாக ஒரு தறியை அமைக்கச் சொன்னாள். நூல்களைச் சுற்ற மரக்குழல்களை யும் தறிக்கு வேண்டிய மற்ற உப கரணங்களையும் தயாரித்துக் கொடுக்கச் சொன்னாள். தச்சனும் அவற்றைத் தயாரித்துக் கொடுத் தான். ராணி உற்சாகத்துடன் பட்டுப் புழுக்களின் கூடுகளைச் சேர்த்து பட்டு நூல் எடுத்துக் குழல்களில் சுற்றினாள். அவள் இப் படியாகப் பட்டுத் துணி தயாரிக் கும் வேலையில் உற்சாகத்துடன் ஈடுபட்டாள். அதனால் அவள் கவலை மறைந்தது.

சக்கரவர்த்தி மறுநாள் காலை யிலேயே தன் மந்திரிகளிடம் ''ராணியின் மனதைக் களிப்பிக்க ஏதாவது திட்டம் தீட்டினீர் களா?'' என்று கேட்டார். ஒரு மந்திரியோ ''ஒரு அழகான மயிலைப் பிடித்துவந்து நம் பூங்கா வில் ராணியின் முன் ஆடவைத் தால் அவரது மனக்கவலை மறைந்து விடும்'' என்றான்.

மற்ற மந்திரியோ ''ஒரு அழ கான குளத்தை பூங்காவில் அமைத்து அதில் தாமரை மலர்





கள் வரச் செய்தால் ராணியார் அதனைப் பார்த்து மனம் மகிழலாம்'' என்ருன். ஆனுல் சக்கரவர்த்தியோ ''இந்த இரண்டு யோசனைகளுமே சரி இல்லை. ராணியைக் கூப்பிட்டுக் கேட்கலாம்'' எனச் சொல்லி ராணியை அழைத்து வரும்படி ஆளை அனுப்பினுர்.

ஆனுல் ராணி இன்னும் தம் அறையிலிருந்து வெளியே வரவே இல்லை என்று பணிப் பெண்கள் பதில் சொல்லி அனுப்பினுர்கள். அதைக் கேட்ட சக்கரவர்த்தி ''ஏன்? அவளுக்கு உடம்பு சரியில்லையா? படுக்கையில் படுத்திருக்கிருளா?'' எனக் கூறியவாறே சட்டெனச் சிம்மாசனத்திலிருந்து எழுந்து நடந்து ராணியின் அறைக்குள் சென்ருர்.

அறைக்குள் அவர் கண்ட காட்சி அவரைத் திகைக்க வைத்தது. ஏனென்ருல் ராணி ஒரு தறியில் உட்கார்ந்து கொண்டு ஆடையை நெய்து கொண்டிருந்தாள். அவள் முகம் ஆனந்தத்தால் மலர்ந்திருந்தது. கவலை என்பதோ கொஞ்சம் கூட அவள் முகத்தில் இல்லவே இல்லை.

தன் அறைக்குள் நுழைந்த சக்கரவர்த்தியை அவள் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். பிறகு அவள் ''பார்த்தீர்களா? இந்தப் பட்டாடையை! இது தேவவஸ்திரம். இதனை நெய்து உங்களுக்குக் கொடுக்கப் போகிறேன். இதனை மறுக்காமல் ஏற்றுக் கொள்வீர்களல்லவா?'' என்று மகிழ்ச்சி ததும்பக் கேட்டாள்.

''மறுப்பதா? இவ்வளவு அழகான ஆடையை, அதுவும் நீயே உன் கையால் நெய்த ஆடையை நான் ஏற்க மறுப்பேனு?'' என்ருர் சக்கரவர்த்தி. அப்போது சிலிங் தான் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தபோது சூடான தேநீரில் பட்டுப் புழுவின் கூடு விழுந்ததையும் பிறகு அதை எடுத்துப் பார்த்த போது தன் மனதில் தோன்றிய எண்ணத்தையும் விவரமாகக்

கூறினாள். பிறகு அவள் ''நான் தங்களது மனைவி. பட்டத்து ராணி. எனவே நான் துணி நெய்கிறேன் என்பது வெளி உலகிற்குத் தெரிந்தால் அது தங்கள் கௌரவத்திற்கு இழுக்காகும். அதற்காகத்தான் தறியை ரகசியமாக என் அறையிலேயே அமைத்து பட்டுத் துணியை நான் நெய்து வரலானேன். இதுவரை யாரும் இந்த அறைக்குள் வந்து நான் துணி நெய்ததைப் பார்க்கவில்லை. நீங்கள்தாம் இப்போது பார்க்கிறீர்கள்'' என்றாள்.

சக்கரவர்த்தியும் ''உன் மனம் சந்தோஷப்பட்டால் அதுவே போதும் அதற்காக இந்த நாட்டில் பாதியைக்கூட இழக்க நான் தயார். எந்த வேலையானால் என்ன, உன் கவலையை மறந்து நீ மகிழ்ச்சியோடு இருக்க இது உதவியதே, அதுவே போதும்'' என்றார். அப்போது சிலிங் ''அப்படியானால் நான் தங்களை ஒன்று மாத்திரம் வேண்டிக் கொள்கிறேன். அதைச் செய்து தருவீர்களா?'' என்று கேட்டாள். சக்கரவர்த்தியும் ''தாராளமாகக் கேள் உடனே செய்து முடிக்கிறேன்'' என்றார்.

''பல கம்பிளி மரங்களை நட்டு ஒரு தோட்டத்தை எனக்குக் கொடுங்கள். அதில் பட்டுப் புழுக்கள் கூடுகள் கட்டும். அவற்றிலிருந்து பட்டு நூல் எடுத்து இம் மாதிரிப் பட்டுத் துணியை நெய்கிறேன்'' என்றாள்.

சக்கரவர்த்தியும் அவளது விருப்பத்தை நிறைவேற்றி வைத்தார்.

சிலிங்தான் உலகில் முதல்முதலாகப் பட்டுத் துணி நெய்தாள். சீன தேசத்தில் பட்டு முதலில் தயாரானதால் அக் காலத்தில் சீனத்துப் பட்டு என்பது உலகில் உள்ள மற்ற நாடுகளில் எல்லாம் வெகுவாகப் பாராட்டப் பட்டது.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1980 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்**



Ravindra S. Kamboj

★



Prabu Sankar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ நவம்பர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: அலங்காரம் செய்து இன்பம் கொள்வேன்

இரண்டாவது போட்டோ: அகங்காரம் நீக்கி துன்பம் வெல்வேன்

பரிசு பெற்றவர்: திருமதி விமலா,

சிதம்பரம் நகர், தூத்துக்குடி-3.

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 2 & 3, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# ட்ரிங்...ட்ர்ரிங்...ர்ரிங்!



புதிய சிகப்பு சைக்கிளிலே காசி பறக்கிறான் பள்ளிக்கு...!

உல்லாச விடுமுறை முடிந்ததுமே
எல்லாரும் பள்ளி விரைந்தனராம்
காசி புதிய வண்டியிலே
கண்மண் தெரியா வேகத்தில்...
ட்ரிங்...ட்ரிங்...ட்ரிங் !



'புத்தம்புதிய எழில் வண்டி'
துககத்தோடே
சொன்னான் கரியன்.




கருவத்தோடே கருச்சித்துப்
பொறுமல் சொன்னான் சிங்கனுமே :



'போடா காசி பள்ளிக்குப்
போதும் உந்தன் பிகுவெல்லாம்'



'போடா போ' இது காசி,
'எந்தன் புதிய வண்டியிது
எந்தன் தொந்தியில் சேமித்து
எனக்கே எனக்கு வாங்கினது
எவரும் தொடவும்
விடமாட்டேன்.'

சிடுசிடுத்தது கருங்காகம்:




காசியின் சைக்கிளைப் பறித்திடணும்
களிப்புடன் சவாரி செய்திடணும்
திட்டந்தீட்ட அனைவரையும்
காகம் விளித்துக் கூட்டியதாம்.



திட்டம் இதுதான் சிறுவர்களே :

'சிவிங்கி காசியைத் துரத்திடுவான்
தவித்துக் காசி ஒதுங்கியதும்
கருங்காகம் குரலும் கொடுத்திடுமே
வயிறன் வழியை மறித்திடுவான்

காலால் உதைப்பான் கழுதையன்
காசி கீழே விழுந்ததுமே
காசியின் சைக்கிளைக் கவர்ந்திடலாம்'.




பின்பு நடந்தது இதுபோலே—

சிவிங்கி காசியைத் துரத்திட்டான், சிவிங்கியின் முன்னே காசியுமே
'ஜிவுக்'கென பறந்தான் சைக்கிளிலே.

உச்சி மரத்தில் ஓர்கிளையில்
உற்றுப் பார்த்தான் பச்சையன்
உடனே அறிவுடன் சொல்லிட்டான் :

சேமித்திடுங்கள் சிறுவர்களே
நாளும் களித்து மகிழ்ந்திடுவீர்.

ஸ்டேட் பாங்க் சேமிப்பு
வளர்ந்திடுமே வாழ்வெல்லாம்.



**ஸ்டேட் பாங்க்**

**நேசக் கரம் நீட்டி நெருங்கியே வளர்வோம்**

SB-4840A


கண்ணன் -
ஆசைக்கோர்
அண்ணன்


செல்லத் தங்கையைச்
சீண்டிக்கொண்டே இருப்பான்


கெஞ்சிடும் வரைப்
பின்னலைப்பிழுத்து
தொல்லைதருவான்


ஆயினும்,
அவன் அன்பின் எல்லை


உடைந்த பொம்மையைத் தானே
சரிசெய்வான். தங்கைக்காக!


தங்கையைச் சீண்டும் சிறுபயலைச்
செம்மையாகப் புடைப்பான்.


பிரியமாகப் பரிசு
பலதருவான்,
தங்கைமுகம்
மலர இன்புறுவான்.


nutrine
nutrine
nutrine
nutrine
அப்பரிசுதான்...
பலவகைக்கனிச்சாறு.
பலேஜோரு "நியூட்ரின்" அதன்பேரு!




சிறுவரின் சண்டைகளில் "சமரசம் செய்யும்
அன்புப்பரிசு - நியூட்ரின்
nutrine
நியூட்ரின்
தின்னத்தின்ன திகட்டாத மிட்டாய்!

இதன் சுவை உப்பென்று
சாதிப்பவரும், இனிப்பென்று
வாதிப்பவரும், மனமுவந்து
சொல்வதோ ஆஹா,
பிரமாதம்!

உதிரி விற்பனை
இல்லை—
போலிகளைக்
கண்டு
ஏமாறாதீர்

பார்லே

க்ராக்ஜாக் பிஸ்கட்டுகள்–இனிப்பும் உப்பும் இணைந்திட்ட மோச

everest/78/F